*Śrīrāmānujan̲*

*Sam 3, ital̲ 5*

*February 20, 1951*

Record no. 2446

# ஸ்ரீராமாநுஜன் 29

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

3 ஸம் | விக்ருதிஞு (20—2—51) மாசிமீ | 5 இதழ்


26, 28, 30, 33, 35, 37, 40, 42, 43.

## எம்பெருமானாரும் எம்பாரும்.

எம்பெருமானார் திருவடிகளில் பலபல முதலிகள் ஆச்ரயித்திருந்தாலும் அவர்களுள் எம்பாரே தலைமை பெற்றனர். நம்முடைய குருபரம்பரையானது—ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர் என்றிப்படியன்றோ வருகின்றது. ‘‘மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்’’ என்று ஒப்புயர்வற்ற பெரும்புகழ்பெற்ற கூரத்தாழ்வான் இருக்கச் செய்தேயும் எம்பார்க்கே ப்ராதாந்ய மானதற்கு யாது காரணம்? என்று சிலர் விமர்சிப்பதுண்டு. கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டரை ஸ்வாமி யெம்பெருமானார் எம்பார்திருவடிகளிலே காட்டிக் கொடுத்ததுதான் இதற்குக்காரணம்.

அப்படி அவர் காட்டிக் கொடுத்ததற்குத்தான் யாது காரணமென்னில்; கூரத்தாழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரித்தார்களென்கிற ஆனந்தச் செய்தியைக் கேட்டருளின எம்பெருமானார் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கி ஒருநாள் அந்த திவ்ய சிசுக்களைக் கடாக்ஷிக்க எம்பாருடன் ஆழ்வான்திருமாளிகைக்கு எழுந்தருள, அப்போது எம்பார் உள்ளே சென்று பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கைத்தலத்தில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருமளவில் குழந்தைகட்குக் காப்பாக த்வயாநு ஸந்தானம் செய்து கொண்டே வந்தார். பிறகு எம்பெருமானார் அத்திவ்ய சிசுக்களைக் கடாக்ஷிக்கையில் ‘கோவிந்தப் பெருமாளே! இக் குழந்தைகளின் மேனியில் த்வயம் மணக்கிறதே; என் செய்தீர்?’ என்று கேட்க, ‘குழந்தைகட்கு அனுக்கம் வாராமைக்காக த்வயாநுஸந்தானம் செய்து காப்பிட்டேன்’ என்று எம்பார் கூற, அப்போது எம்பெருமானார் ‘‘இக்குழந்தைகளின் நன்மைக்கு நீரே முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக் கடவீர்’’ என்று எம்பார்க்கு நியமனம் தந்தருளினர். அந்த நியமனத்தின்படி எம்பாரே பட்டர்க்கு ஆசார்யராக அமைந்தார்.

இதனால், கூரத்தாழ்வான் பட்டர்க்கு ஆசார்யரல்லர் என்று கொள்ளலாகாது. பட்டரும் சீராமப்பிள்ளையும் ஆழ்வான் திருவடிகளில் திருவாய்மொழிப் பொருள் கேட்டதாக

இதிஹாஸ முள்ளது. இவ்விஷயம் திருவாய்மொழியில் (1—2—10) * எண்பெருக்கந் கலத்து* என்கிற பாட்டின் ஈடு முப்பத்தாருயிரப் படியிலுள்ள இதிஹாஸத்திலும் விசதம். ஆகவே பட்டர்க்கு எம்பார் ஆழ்வான் ஆகிய இரண்டு ஆசார்யர்களினுடையவும் ஸம்பந்த முண்டு; ஆனது பற்றியே பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் உபக்ரமத்தில் இட்டருளின ச்லோகத்தில் "வந்தே கோவிந்த தாதௌ* என்று எம்பாரையும் ஆழ்வானையும் ஆசார்ய ஸ்தானத்தில் வைத்துத் துதிசெய்தார். *ராமாநுஜபதச்சாயா* என்கிற எம்பார்தனியனும், *ஸ்ரீவத்ஸசிஹ்ந மிச்ரேப்ய:* என்கிற ஆழ்வான் தனியனுமாக இரண்டு தனியன்களும் பட்டரே யருளிச் செய்தவையிறே.

இனி, எம்பாரென்னுஞ் சொல்லுக்குப் பொருளென்ன வென்று பார்ப்போம்; எம்பெருமானாரென்னுஞ் சொல்லின் சிதைவாகவே எம்பாரென்னுந் திருநாமம் சாத்தப்பட்டதென்று காண்கிறது. ஆனாலும் பட்டர் 'எம், பார்' என்றிரண்டு சொற்களின் சேர்க்கையாகக் கொண்டு, எம்முடைய பார்—யாம் தங்குமிடம் என்ற பொருளைக் காட்டி (தனியனில்) *மத் விச்ரமஸ்தலீ* என்றருளிச் செய்தார். ஸம்ஸாரதாபதப்தர்களான நாம் ஒதுங்கி இளைப்பாறுமிடம் என்றபடி. எம்பார் ராமாநுஜ பதச் சாயையென்று ப்ரஸித்தி பெற்றவராதலால் சாயையின் தன்மைக்குச் சேர மத்விச்ரம ஸ்தலீ என்றது மிகப் பொருத்தம்.

ஸம்ப்ரதாயத்தில் எம்பாரைப்பற்றி ஒரு விசாரமுண்டு; இவர் திருமலை நம்பிகளால் திருத்தப்பட்டு அவர் திருவடிகளிலேயே திருவிலச்சினை (சக்ராங்கனம்) பெற்றவராயிருக்க, ஸமாச்ரயண பரம்பரையில் எம்பெருமானாருடைய திருவடியாக இவரையநுஸந்தித்தல் எங்ஙனே கூடுமென்று இதற்குச் சிலர் சொல்லுவதென்னவென்றால், ஸ்வாமி யெம்பெருமானார் திருமலைநம்பிகளிடத்தில் இவரை உதகதாராபூர்வகமாக ப்ரதிக்ரஹித்த பின்பு மறுபடியும் தாம் இவர்க்குத் திருவிலச்சினை செய்தருளினாரென்று.

இதைப் பலர் ஏற்றுக்கொள்வதில்லை. நம்பிகள் இவரை உதகதாராபூர்வகமாக ஸ்வாமிக்குக் கொடுத்தருளினதே போதுமானது. இவர் திருவடிகளில் ஆச்ரயித்தபட்டர் ராமாநுஜபதச்சாயா என்று எம்பெருமானாருடைய திருவடிஸம்பந்தமே நிரூபகமாக அருளிச் செய்திருக்கையாலே இதற்குமேல் எவ்விதமான சங்கைக்கும் அவகாசமில்லையென்று விடுக்க.

### எம்பெருமானார் வடிவழகிலீடுபாடு (எம்பார் அருளிச் செய்தது.)

பற்பமெனத்திகழ் பைங்கழலுன்றன் பல்லவமேவிரலும்
பாவனமாகிய பைந்துவராடை பதிந்தமருங்கழகும் *
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
முன்னவர்தந்திடுமொழிகள்நிறைந்திடுமுறுவல்நிலாவழகும் *
கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
காரிசுதன்கழல்சூடியமுடியும் கனநற்சிகைமுடியும் *
எப்பொழுதும் எதிராசன்வடிவழகென்னிதயத்துளதால்
இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரே.

எம்பெருமானார் திருவடிகளேசரணம்.

---

# பெரியாழ்வாருடைய அநுபவம்.

வ்யாஸபராசராதி மஹர்ஷிகளும் ஆழ்வார்களும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தை விசேஷமாக அநுபவித்திருந்தாலும் பெரியாழ்வாரநுபவித்த விதமாக ஒருவரும் அநுபவித்திலர். இவருடைய அநுபவம் வெகு ஆச்சரியமாக அமைந்தது. "திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கையசோதை பெற்றாளே" என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின் படி தேவகியிழந்த அநுபவங்களையெல்லாம் யசோதைப்பிராட்டி குறையொன்றுமின்றியே அநுபவிக்கப் பெற்றாளெனினும் பெரியாழ்வாரனுபவித்தவற்றில் ஏகதேசமே யசோதை அநுபவித்தாளென்று சொல்லில் இழுக்காகாது. * வண்ணமாடங்கள் சூழ்திருக்கோட்டியூர் * என்று தொடங்கி * குழலைவென்ற குளிர்வாயினராகிச் சாது கோட்டியுட்கொள்ளப் படுவாரே * என்பதளவாக இருநூற்றறுபது பாசுரங்களினால் பெரியாழ்வாரநுபவித்திருக்கும் க்ருஷ்ணாவதார திவ்யாநுபவம் அநுபவரஸிகர்களின் நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்க வல்லதென்பதில் தட்டுண்டோ?

"பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜன்மத்தை ஆஸ்தாநம் பண்ணினார்கள்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்யப்பட்டிருப்பதில் சில குருகுலவிமுகர்கள் ஒரு ஆக்ஷேபம் சொல்லுவதுண்டு; அதாவது—'யசோதை இப்படியநுபவித்தாள், கோபிகள் இப்ப யநுபவித்தார்கள்' என்று பெரியாழ்வார் சொல்லியிருக்கிறாரேயொழிய வேறில்லையே; இதனால் பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாகச் சொல்லப் பொருத்தமுண்டோ? ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீ பாகவதாதிகளில் கதை சொல்லியிருக்கிறவிதமாகத்தானே பெரியாழ்வாரும் சொல்லியிருக்கிறார்; பராசராதிகள் கோபஜந்மத்தை ஆஸ்தானம்பண்ணினதாகச் சொல்லுவாருண்டோ? இல்லையே; அப்படியிருக்க, "எசோதை சொன்னதை விட்டுசித்தனாகிய நான் சொல்லிவைத்தேன்" என்று பதிகந்தோறும் நிகமனப் பாசுரத்தில் பேசியிருக்கின்ற பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினாராகச் சொல்லப்படுவதற்கு என்னபொருத்தமுள்ளது? என்று.

இதற்கு இங்குச் சுருக்கமாக ஸமாதானம் தெரிவிக்கிறோம்; கேண்மின்; பெரியாழ்வார் திருமொழியின் முதற்பதிகமாகிய * வண்ணமாடங்கள் பதிகம் பெரியாழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்ததேயன்றி யசோதையின் பாசுரத்தை அநுவதித்து அருளிச்செய்ததன்று என்பது அத்திருமொழியின் அமைப்பினாலும் முடிவு பாசுரத்தினாலும் வ்யக்தமாக விளங்கும்; * செந்நெலார்வயல் சூழ்திருக்கோட்டியூர், மன்னுநாரணன் நம்பி பிறந்தமை, மின்னுநூல்விட்டுசித்தன்விரித்த, இப்பன்னுபாடல்வல்லார்க்கில்லை பாவமே * என்ற (அப்பதிகத்தின்) நிகமனப்பாசுரம் காண்க. இங்ஙனே தாமான தன்மையில் நின்று பேசுமிப் பதிகத்தில் ஒன்பதாவது பாசுரம் எவ்வாறு அமைந்துளதென்று பார்க்கவேணும்; * கிடக்கில் தொட்டில் கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும், மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய் * என்றன்றோ அப்பாசுரமுள்ளது. இப்பாசுரம் பேசும்போது ஆழ்வார் தாமே யசோதையாக மாறிவிட்டாரென்பதை இசைந்து தீரவேண்டுமே. இல்லையாகில் இப்பாட்டு அந்வயிக்கமாட்டாதன்றோ. "இப்படி யசோதை மெலிந்து மொழிந்தாள்" என்று இப்பதிகத்தில் சிறிதும் காட்டப்படவில்லையே. ஆகவே குருகுலவிமுகர்களின் ஆக்ஷேபம் அஸங்கதமென்று முடிந்தது. இது நிற்க.

இப்பெரியாழ்வார் திருமொழியில் மூன்றாம்பத்தின் முதற்பதிகம் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு* என்று தொடங்குவது. இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரமும் *உனக்கு கஞ்சுவன் அம்மம் தரவே* என்று முடிகின்றது. யசோதைப்பிராட்டி கண்ணனுக்கு

முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகச் சொன்னதை அவளுடைய பாவனை கொண்டு சொன்ன பதிகமிது. இதுவரையில் கண்ணனை ஸாதாரணக் குழந்தையாகவே நினைத்திருந்த தனுல் முலைப்பால்கொடுத்து வந்ததாகவும், இப்போது பூதநாவதம், சகடாஸுரபங்கம், யமளார்ஜுநபங்கம் முதலான அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டதனுல் அன்னவனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகவும் இப்பதிகத்தில் சொல்லப்படுகிறது. இத ல், கண்ணன் முலைப்பாலுண்ணும் பருவத்தில் இது சொல்லப்படுவதாக நன்கு விளங்கிற்று.

இத்தகையதான இப்பதிகத்தில் சில பாசுரங்களில் கண்ணபிரானுடைய ஜார சோர சேஷ்டிதங்களும் அநுபவிக்கப்படுகின்றன: இரண்டாம் பாட்டுக் காண்மின்; *பொன் போல் மஞ்சனமாட்டி அமுதூட்டிப்போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச் சாடி* என்று சகடபங்கம் செய்தவாற்றைச் சொல்லி, உடனே *வடக்கிலகம் புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொருகன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த அன்பாவுன்னை யறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* என்றுள்ளது, மேல் நான்காம் பாட்டில், *மையார்கண் மடவாச்சியர் மக்களை மையன்மை செய்தவர் பின்போய், கொய்யார் பூந்துகில் பற்றித் தனி நின்று குற்றம் பல பல செய்தாய்* என்றும், மேல் ஆறும் பாட்டில் *சுரும்பார் மென்குழல்கன்னி யொருத்திக்குச் சூழ்வலை வைத்துத்திரியும் அரம் பாவுன்னை யறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* என்றும், மேல் ஏழாம் பாட்டில் *மருட்டார்மென்குழல் கொண்டு பொழில்புக்கு வாய்வைத்து அவ்வாயர் தம் பாடி, சுருட்டார்மென்குழல் கன்னியர் வந்துன்னைச் சுற்றுந்தொழ நின்றசோதீ* என்றும், மேல் எட்டாம்பாட்டில் *பிறர்மக்களை மையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்* என்றும். மேல் *நீ ஆய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர் படவே கொண்டு போதி* என்றும், *தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத் தடங் கொண்டுபுக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இரா நாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்* என்றும் இப்படி கண்ணனுடைய ஜார சேஷ்டிதங்கள் மிக மிகப் பேசப்பட்டிருக்கின்றன. முலையுண்ணும் பருவத்தில் இவ்வகையான சேஷ்டிதங்கள் ஸம்பாவித மன்றே; பருவத்திற்கு அஸம்பாவிதமான விஷயங்களைச் சொல்லி யநுபவிக்கலாமோ? என்று சங்கிக்க நேர்கின்றது.

இதற்கு நாம் சொல்லக்கூடிய பரிஹாரமாவது—இங்குச் சொல்லப்படுகிற ஜாரக்ருத்யங்கள் அப்பருவத்திலே நடந்தவை யென்றே கொள்ளவேண்டிய அவசியம் சிறிதுமில்லை. யசோதையின் பாவனையிற்பேசுகிற ஆழ்வார் மிகவும் பிற்பட்டவராதலாலும், யௌவன பருவத்திற் செய்த செயல்களும் அவருடைய அநுஸந்தானத்திற்குச் கோசரமாயிருப்பதனுலும் அந்தச் சரிதைகளையும் தாம் கூட்டிக்கொண்டு அருளிச் செய்கிருரென்றே கொள்ள வேணும். வஸுதேவர் திருமாளிகையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த கண்ணபிரானது பாதாதிகேசாந்த திவ்யாவயவ ஸௌந்தர்யங்களை அயலகத்துப்பெண்களுக்குக் காட்டுகின்ற யசோதைப்பிராட்டி "உழந்தாள் நறுநெய் ஒரோதடாவுண்ண, இழந்தாளெரிவினுல் ஈர்த்தெழின்மத்தின், பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான் முழந்தாளிருந்தவாகாணீரே" என்றும் "பிறங்கிய பேய்ச்சிமுலை சுவைத்துண்டிட்டு, உறங்குவான் போலே கிடந்தவிப்பிள்ளை—குறங்குகளை வந்து காணீரே" என்றும் சொல்லியிருப்பதெல்லாம் அப்போது ஸம்பாவிதமன்றிக்கேயிருக்கச் செய்தேயும் பவிஷ்யத்கதாநுஸந்தானம் ஆழ்வார்க்கு உள்ளதாகையாலே பொருந்துமென்று நிர்வஹிக்கப்படுவது போலவே இதுவும் நிர்வஹிக்கக் குறையில்லையென்று கண்டு கொள்வது.

---

# மஹா வீரன் வீறு.

ஸ்ரீராமாயணத்திலும், மற்றும் இராமபிரானைப்பற்றிப் பேசும் பல நூல்களிலும் இராமனை வீரனென்றும் சூரனென்றும் பராக்ரமசாலியென்றும் பாராட்டிக்கூறுவது விசேஷமாகக் காணத்தக்கது. இராமனுக்கு மஹாவீரனென்ற ஒரு திருநாமமுண்டு. "ஜயஜய மஹாவீர !" என்றே ரகுவீரகத்யத்தின் தொடக்கம். வீரராகவனென்றே ஒரு திவ்ய தேசத்தில் திருநாமம் பெற்று விளங்குகின்றமை ப்ரஸித்தம். பவபூதிமஹாகவி மஹாவீரசரிதமென்றே பெயரிட்டு நூலியற்றினன்.

ஆழ்வார்கள் இராமனது செயலைச் சொல்லி வீரனென்றே வாய் வெருவுவர்கள் ; " இலங்கை மன்னனைந்தொடைந்து பைந்தலை நிலத்துகக் கலங்கவன்று சென்று கொன்று வென்றிகொண்ட வீரனே ! " என்றும் "மாறுசெய்த வாளரக்கன் நாளுலப்ப அன்றிலங்கை நீறுசெய்து சென்றுகொன்று வென்றிகொண்ட வீரனுர்" என்றுமுள்ள [திருச்சந்த விருத்தம்] பாசுரங்கள் காண்க.

இவை யெல்லாவற்றிலுங்காட்டில் எதிரியின்கையாலே விடுதீட்டென்னுங் கணக்கிலே இராவணனே வியந்து போற்றும் வீரியம் இராமனுக்குள்ளது. [வால்மீ. யுத்த. 106-6.] "சத்ரோ꞉ ப்ரக்க்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை꞉" என்பது இராவணனுடைய மொழி. இராமனை ப்ரக்க்யாதவீர்யனென்று இராவணன் தன்வாயினுல் போர்க்களத்திற் சொல்லுவதானது அந்த வீர்யத்தைத் தான்மிக நன்ருகவநுபவித்ததனுலன்ரே ! "விக்ரமை꞉ ரஞ்ஜநீயஸ்ய" என்று அடுத்தபடியே சொல்லுகிருன்.

இங்ஙனே சொல்லும்படியாக இராமன் செய்த வீரச் செயல்கள் பலபல விருப்பினும் ஒன்றெடுத்துக் காட்டுவோமிங்கு. யுத்த காண்டத்தில் தொண்ணூற்று நான்காம் ஸர்க்கம் காண்க. அங்கு மூலபலம் திரண்டவன்று இராவணனுடைய அதிமாநுஷப்போர் வல்லமையைப் பேச வான்மீகி முனிவரும் தடுமாறுகின்ருர். "சிங்கம் பிங்கம் சரைர் தக்தம் ப்ரபக்நம் சஸ்த்ர பீடிதம். பலம் ராமேண தத்ருசுர் ந ராமம் சீக்ரகாரிணம்." என்று, இராமனுல் பலவாறு தகர்ப்புண்ட அரக்கரது சேனைகளைக் கண்டார்களே யொழிய பம்பரமாகச் சுழல்கின்ற இராமனை ஒருவரும் காணமாட்டிற்றிலர் என்கிருர். மேலே *தே து ராமஸஹஸ்ராணி ரணே பச்யந்தி ராக்ஷஸா꞉* என்று ஆயிரக்கணக்கான ஸ்ரீராமமூர்த்திகளைக் கண்டார்களென்கிருர். உடனே *புந꞉ பச்யந்தி காகுத்ஸ்தம் ஏகமேவ மஹாஹவே* என்று, அந்தப் போர்க்களத்தில் இராமனொருவனையே கண்டார்களென்கிருர். இராமனைக் காணவே யில்லையென்பது, ஆயிரக்கணக்கான ராமர்களைக் கண்டார்களென்பது, ஒரு ராமனையே கண்டார்களென்பது - ஆகவிப்படி ஒன்ருேடொன்று சேராத வண்ணம் பேசும்படியாகவன்ருே பெருமாள் மிக விசித்திரமான போர்த்தொழில் நிகழ்த்திற்று.

திருவாய்மொழியில் (8—6—3.) *ஒருவரிருவரோர் மூவரென நின்று, உருவுகரந்து உள்ளுந்தோறும் தித்திப்பான்* என்ற பாசுரத்திற்குப் பூருவாசாரியர்கள் பொருள் நிர்வஹித்திருக்கிற விதம் இதரபண்டிதர்களின் புத்திக்குச் சிறிதும் எட்டமாட்டாதது. ஒருவரிருவரோர் மூவரென நின்றதும் உருவுகரந்ததும் எப்போதென்று தெரிந்துகொள்ளமுடியாதபடி ஆழ்வாரதுபாசுரம் தோன்றியுள்ளது. இதற்குக் கீழ்ப்பாட்டு *செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை,

ஸ்ரீரா. 29—14.

உருக்கெட வாளிபொழிந்த வொருவனே* என்று முடிந்திருக்கிறது. மேற்பாட்டின் முன்னடிகட்குக் கீழ்ப்பாட்டின் பின்னடிகளோடு அந்வய மென்று கண்டு உரை செய்தருளி யுள்ளார்கள். இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் இவை காண்மின்;—"ஒருவரிருவரோர் மூவரென நின்று உருவு கரந்து - உருக்கெடவாளி பொழிந்த வொருவன் என்று கீழோடே அந்விதமாகக் கடவது. மூலபலம் சாம்படி அருளுகிறவன்று முந்துற ஒருவனாய்த் தோற்றி, சாரிகையில் வேகம் மிக மிக இருவரும் மூவருமாய்த் தோற்றி, வேகம் மிக்கவாறே இந்த்ரிய ஸம்யோகத்துக்கு இடமில்லாதபடியாலே ரூபக்ரஹணம் அரிதாகி உருக்கெட வாளி பொழிந்த வொருவனென்று அந்வயம். வ்யாபரித்த சடக்காலே ரூபம் கண்ணுக்குப் பிடிபடா தொழிகை" என்று. இதனால் இராமனது வீரம் வாசாம கோசரமென்றதாயிற்று.

இராமன் இவ்வளவு மஹாவீரனாயிருக்கும்போது இராவணனை ஒரு நொடிப் பொழுதில் கொன்றிருக்கலாமே; அங்ஙனங் கொல்லாது வெகு ப்ரயாஸங்கள் பட்டதாகத் தெரிகிறதே, அஃது ஏன்? என்று சிலர் கேட்கக்கூடும். கேண்மின்; "பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" என்று ஆண்டாளும் "சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறைவன் தலைபத்து உதிரவோட்டி ஓர் வெங்கணையுய்த்தவன்" என்று திருப்பாணாழ்வாரு மருளிச்செய்தபடியே ராவண ஸம்ஹாரத்தைப் பெருமாள் அலவீலையாகவேதான் செய்தார். அதில் ஐயமொன்று மில்லை.

'எப்படியாவது ராவணன் உடன்பட்டு வழிபட்டு உஜ்ஜீவிக்கவும் ஜீவிக்கவும் ப்ராப்த மாமோ?' என்கிற நசை பெருமாளுக்கு இருந்தமையினாலேயே அவனை ஸம்ஹரிப்பதில் காலதாமதம் செய்யப்பட்டதென்கிற தத்துவம் உணரத்தக்கது. இராவணனைக் காட்டிலும் பன் மடங்குவலிமைமிக்கவனென்று ப்ரஸித்திபெற்றிருந்த வாலியை அநாயாஸமாக முடித்தவர் பெருமாள். [ஸுந்தரகாண்டம் ஸர்-51. ச்லோ. 11.] திருவடி இராவணனுக்கு ஹிதோபதேசம் செய்கையில் *த்வயா விஜ்ஞாதபூர்வச் ச வாலீ வாநரபுங்கவ:, ராமேண நிஹதஸ் ஸங்க்யே சரேணைகேந வாநர:* என்று, 'அப்பா ராவணா! வாலியென்கிற வாநரேச்வரரை ஏற்கெனவே நீ அறிவாயன்றோ, அவர் இராமனால் ஒரே யம்பினால் முடிக்கப்பட்டார்காண்' என்கிறார்.

அன்றியும், இராவணனைப் பலவாறு பங்கப்படுத்தியவன் கார்த்தவீரியார்ஜுனன் ; அன்னவனைப் பரசுராமன் தனது கோடாலிப்படையினால் ஆயிரங்கைகளையும் வெட்டிக் கொன்றவன். அப் பரசுராமன் இராமபிரானிடம் பட்டபாடு தெரிந்ததே. இத்தகைய ஒப்புயர்வற்ற ஆற்றல்பெற்ற இராகவன் இராவணனைச் சங்கரிக்கச் சிரமப்படவேண்டுமோ? சிரமப் பட்டதாகக் கதையிலே கண்டால் ஸத்யஸங்கல்பனும் மஹாவீரனுமான இராமன் எதற்காக இப்படிச் சிரமப்பட்டானென்று ஆராயவேண்டுமன்றோ. ஆராய்ந்தவளவில், கீழே நாம் தெரிவித்தகாரணமே ஊர்ஜிதமாகும்.

சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்து தன் தமையனாகிய கரனிடஞ் சென்று செய்தியறிவித்துப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தையுண்டாக்க, அவன் பதினாலாயிரம்ஸேனாதிபதிகளையும் ஸேனைகளையும் இராமனோடு போர்புரியவனுப்ப, இராகவன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட, பிறகு கரன்தானே நேரில் வந்து எதிர்க்க, இராமன் "அஸஹாய சூர!" என்று ரகுவீரகத்யத்தில் விளிக்கும்படியாக லக்ஷ்மணனையும் துணைகொள்ளாமல் ஏகாகியாய் அவன் தலையை யறுத்திட்டதும் ப்ரஸித்தம்.



"சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி!" என்று வயிறுபிடித்த மஹரிஷிகளும் வியக்கும்படி அவலீலையாகவன்றோ நீறு செய்தது. அத்தகைய பேராற்றல் பெற்ற பெருவீரனுக்கு இராவணன் ஒரு பதார்த்தமோ? ஒரேயடியில் அவனைத் தொலைக்கமாட்டாமையில்லை. எவ்வகையினாலாவது அவன் அபிமுகனாக வருகிறானோவென்று பார்த்திருந்தாரத்தனை. இது பெருமாளுடைய வார்த்தையினாலேயே நன்கு விளங்கும்படியை நிரூபிப்போமிங்கு.

ஸ்ரீ ராமாயண யுத்தகாண்டத்தில் "மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம், க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ." என்பது விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்ததொரு ச்லோகம். இராவணன் மாண்டபின்பு 'இந்த மஹாபாபிக்கு நான் உத்தரக்ரியை [ஈமக்கடன்] பண்ணமாட்டேன்' என்று ஒரு நிலைநின்ற விபீஷணாழ்வானை நோக்கிக் கூறினது இது. ஸாதாரணமாக வடமொழி பயின்ற அனைவரும் ஸ்ரீராமாயணத்தில் இறங்கி அர்த்தம் சொல்லப்புறப்படுவது வழக்கமாதலால், அப்படிப்பட்டவர்கள் இதற்குக் கூறும் பொருள் எங்ஙனே யென்னில், உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்குப் பகை மரணம் வரைக்குமே யாதலால் இந்த ராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகை வைப்பது ஏதுக்கு? இவனை வதை செய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்கு ப்ரயோஜனமாதலால் அது நிறைவேறப்பெற்றபின்பும் இவன்மீது நாம் பகை பாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்யவேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாகவே பலரும் பொருள் சொல்லுவர்.

இப்பொருள் பொருத்தமுடையதன்றென்றும் இது இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றி இன்சுவைமிக வியாக்கியானம் செய்தருளியுள்ளார். (அதனையே இங்கு விவரிக்கிறோம்.) இதுவரை பெருமாள்மீது இராவணன் பகைபாராட்டியிருந்தானேயல்லாது இராவணன்மீது பெருமாள் சிறிதும் பகைபாராட்டியிருந்ததில்லை; விபீஷணாழ்வானைப் பரிக்ரஹிப்பதா விட்டிடுவதா? என்று விசாரம் நடந்து பரிக்ரஹிப்பதென்று நிச்சயித்து 'ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட! தத்தமஸ்யாபயம் மயா" என்று ஸுக்ரீவனை ஏவி விபீஷணனை அழைத்துக்கொண்டுவர நியமித்தபோது "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்று பெருமாள் கூறியுள்ளார்; வந்தவன் விபீஷணனாயிருந்தாலும் ஸரி; இராவணனே மாறுவேஷம் பூண்டு வந்திருந்தாலும் ஸரி; விடாதே கொண்டுவா என்றார். அங்ஙனே சொன்ன பெருமாளுடைய திருவுள்ளத்திற்கு இணங்கவல்ல பொருளன்றோ பணிக்கவேணும்.

இது கேண்மின்; விபீஷணா! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச் சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன்; அவை ஈடேறுதபடிக்கு இவன் பலவகையான த்வேஷகாரியங்களைச் செய்துவந்தான்; மஹரிஷிகளின் குடியிருப்பை யழித்தான், பிராட்டியைப் பிரித்தான். நம் உயிர்நிலையான ஸ்ரீஜடாயுமஹாராஜரை நலிந்தான்; இப்படிப் பட்ட வைரங்களை இவன் தான் சாகிறவரையில் செய்துதீர்த்தானாயினும் இனிச் செய்யப் போகிறதில்லையே—என்பதே "மரணாந்தாநி வைராணி" என்றதற்குப் பொருள். (வைராணி என்றது வைரகார்யாணி என்றபடி.)

இனி "நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜனம்" என்றதுதான் இங்கு உயிரான வார்த்தை. இதன் பொருளைத்தான் செவ்வனே உணரப்பெறவேணும். "இவனை முடிக்கவேண்டியது நமக்கு ப்ரயோஜனம், அது நிறைவேறிவிட்டது" என்று பெருமாள் சொல்லுவதாகப் பலர்

பொருள் கூறுவர் ; அப்படி கொள்ளவே கூடாது; அப்பொருள்·நெஞ்சாலும் நினைக்கத்தக்க
தன்று; எடுத்துக்கழிக்கவுந்தகாத பொருள் அது. இதற்கு நம்பிள்ளையருளிச்செய்திருக்கிற
ஸ்ரீஸூக்தியை அப்படியே எழுதுகிறோமிங்கு;

“[நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்] இவன் ஜீவித்திருக்கிற நாளிலே நாம் செய்யும்
நன்மையை இவன் விலக்காதொழியவேணுமென்று இத்தனையே பெறப்பார்த்திருந்தோம்;
அது அந்நாளில் பெற்றிலோம்; நாம் தேடியிருந்தவது முந்துறமுன்னம் ஸித்திக்கப்பெற்றோ
மிறே” என்று.

இதைச் சிறிது விவரிப்போம். பகவான் சேதநர்களுக்கு நன்மைபுரியக் கடமைப்
பட்டவன்; தான் செய்யநினைத்த நன்மைகளை நிர்ஹேதுகமாகத் தானே செய்துவிடலாமாறு
லும் “ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேசஸ் ஸதா காருணிகோபி ஸந், ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத்
ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே” என்று சாஸ்த்ரங்களிற் கூறியிருப்பதனுல் சேதநர்களிடமிருந்து
சிறிது எதிர்பாக்கிறுன் என்று ஏற்படுகிறது.

அப்படி பகவான் எதிர்பார்ப்பது எது, என்னில்; அதை நாம் ஒருவிதமாக நிஷ்கர்
ஷித்துச் சொல்லமுடியாது. கர்மயோகம் ஜ்ஞாநயோகம் பக்தியோகம் முதலானவற்றில்
ஏதேனுமொன்றை எதிர்பார்க்கவும் கூடும்; “நாம் செய்யும் நன்மையை இவன் விலக்கா
திருக்கவேணும்” என்று இவ்வளவே யெதிர்பார்ப்பதுமுண்டு. இதற்கு அப்ரதிஷேதம் என்று
பெயர்.

ப்ரதிஷேதமாவது விலக்குகை; அப்ரதிஷேதமாவது விலக்காமை. பகவானுடைய
கருணை நம்மேல் பெருகவொண்ணுதபடி நாம் தந்தலைவெட்டிகளாய்த் திரிவதுண்டே அது
தான் விலக்குகை; நம்முடைய விபரீத ப்ரவ்ருத்திகளைக் கண்டு பகவான் “ஐயோ! நம்முடைய
கருணை புகுவதற்கும் இடம்தராமல் இப்படி தடை செய்கிறுனே பாவி” என்று கண்ணீர்
பெருக்கி நிற்பன். சேதநன் அநுகூல ப்ரவ்ருத்தியொன்றும் செய்யாமற்போனுலும் விபரீத
ப்ரவ்ருத்திகளைச் செய்யாமலாவதிருந்தால் அவனுடைய அருள் வெள்ளம் தடையின்றிப்
பெருகியே தீரும்.

இதை ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் கூரத்தாழ்வான் வெகு அற்புதமாக அருளிச்செய்
கிறுர். (ச்லோ—61.) * யத்ப்ரஹ்மகல்பநியதாநுபவேபி * என்கிற ச்லோகத்தில். இதில்
“க்ஷாம்யஸ்யஹோ ததபிஸந்தி விராம மாத்ராத்” என்பது உயிரான வார்த்தை. சேதநன்
ஸுக்ருத விசேஷங்களைச் செய்யாமற்போனுலும் துஷ்க்ருதமாவதொன்றும் செய்யாமலிருந்
தால் அவ்வளவையே பற்றுசாகக் கொண்டு எம்பெருமான் அருள்புரிந்து தீருகிறுன் என்பது
தான் இந்த கூரத்தாழ்வானது ஸ்ரீஸூக்தியில் காட்டப்பட்ட விஷயம்.

நாமாக வொரு ஸுக்ருதமும் செய்யாதவளவில் அதைப்பற்றிச் சிறிதும் கவலையில்லை.
எம்பெருமானது கருணைப் பெருக்குக்குத் தடையாக அவனோடு எதிரம்புகோப்பதும்,
அவனுக அருள் செய்யத் திருவுள்ளம் பற்றினுலும் அதையும் தடைசெய்வதுபோல் நாம்
விபரீத ப்ரதிகூல ப்ரவ்ருத்திகளிலே கைவைப்பதுமாயிருந்தால் அது கண்டு எம்பெருமான்
ஐயோவென்று சோகிக்கவே நேர்கின்றது.

இராவணன் பிராட்டியைக் கவர்ந்தது, ஜடாயுவை நலிந்தது, பரம பாகவதர்களைக்
குடியிருக்கவொட்டாது தீங்கிழைத்தது முதலியன செய்தாலும் இவற்றைப் பொருள்படுத்



தாமல் கருணைக் கடலான காகுத்தன் “இன்றுபோய் நாளைவா” என்பது முதலிய வார்த்தை
களினுல் இரக்கக் குறி காட்டியிருந்தும் அந்தோ! அவன் பெருமாள்திருவுள்ளத்தை யறியப்
பெற்றிலன். “கச்சாநுஜாநாமி” என்ற பெருமாள் நியமனத்தைப்பெற்று இல்லம் சென்றவன்
திரும்பவும் போர்புரிய வாராதிருந்தானுகில் பெருமாள் அவனையே இலங்கைக் கரசனுக்கி
வைத்தருள்வனே. இப்பேற்றுக்கு அவகாசம் கொடுத்திலனே யவன். ஆகவே, அவன்
திறத்துப் பெருமாள் செய்ய நினைத்த நன்மை அவனுடைய ப்ராதிகூல்யத்தினுல் தடைபட்டுப்
போயிற்று.

அவன்றுனே இப்போது இறந்தொழிந்தனனுதலால் இனி ப்ராதிகூல்யமொன்றுஞ்
செய்யகில்லானே. இதனையே பெருமாள் பரம ப்ரயோஜனமாக நினைத்து “நிர்வ்ருத்தம் ந:
ப்ரயோஜநம்” என்றுர். நாம் செய்யநினைக்கும் நன்மைக்கு ஒரு தடை செய்யாமையாகிற
இந்நிலைமையில் நாம் இவனுக்குச் செய்யக்கூடிய நன்மை யாதெனில், இவனுடலைக் காக்கை
யும் கழுகும் தின்ன விடாமல் பெரியார்களுக்குச் செய்கிற க்ரமத்திலே ஸம்ஸ்காரம் செய்வது
தான்; அதை விபீஷண! நீ செய்வாயாக; நீ செய்யாயாகில் இதோ நான் செய்தே தீருவேன்—
என்று பெருமாளருளிச் செய்வதே *மரணாந்தாநி வைராணி யென்றெடுத்த விந்த ச்லோகத்
தினுல் தேறியது. இப்படிப்பட்ட பெருமாள் இராவணனை ஒரே அம்பினுல் முடிக்காது
மிகவும் தாமதித்தது தம்முடைய சௌர்ய வீர்ய பராக்ரமங்களில் குறையினுலன்று என்பது
நன்கறியத்தக்கது.

விச்வாமித்ர முனிவர் தம் வேள்வியை முடிக்க இராமனை வேண்டித் தயரத மன்னவ
னிடம் வந்தபோது “அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்” என்றுர். இதில்
‘ஸத்ய பராக்ரமம்’ என்றதன் உட்கருத்தை உய்த்துணரவேணும். எதிரியின் சோர்வுபார்த்து
அவனை வதைத்திடாமல் ஆந்தனையும் ஆபிமுக்யம் கொள்ளப்பார்த்து அது கைகூடாவிடில்
கடைசியாகக் கொன்றொழிப்பதே ஸத்யபராக்ரமமுடைமையென்று முன்னோர் உரை செய்
துள்ளார்களென்பதும் உணரத்தக்கது.

எம்பெருமானுடைய வீர்யத்தை மற்றொருபடியாகவும் விவரிக்கலாம். பகவானை
ஷாட்குண்யபரிபூர்ணனென்னும்போது ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு
என ஆறுவகைக் குணங்கள் கொள்ளப்படுகின்றன. இவற்றுள் வீர்யமாவது என்ன?
என்பதை பட்டர் “ம்ருகநாபிகந்த இவ யத் ஸகலார்த்தாந் நிஜஸந்நிதேர்விக்ருதோ விக்ருணோஷி,
கஸ்தூரீ ப்ரியரங்க வீர்ய மிதி தத் து வதந்தே” என்கிற சுலோகத்தினுல் நிரூபித்தருளுகிறுர்;
கஸ்தூரீ பரிமளமானது தான் சிறிதும் விகாரமடையாமலிருந்து கொண்டே பிறருடைய மனங்களை
எப்படி விகாரப்படுத்துகின்றதோ, அப்படியே பகவான் தான் விகாரப்படாமலே ஸகல
பதார்த்தங்களையும் விகாரப்படுத்துவதுதான் வீர்யம் என்றுராயிற்று.

இக்குணம் இராமனிடத்து நன்கு காணத்தக்கது. சுமந்திரன் இராமனைக் கங்கைக்
கரையில் விட்டிட்டுத் தேருடன் திரும்பி வந்து தசரதனிடம் செய்தி சொல்லுகையில்,
இராமனது பிரிவினுல் மரம் செடி கொடி முதலியனவும் வாடி வதங்குவதை, “விஷயே தே
மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:, அபி வ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குர கோரகா:, உபதப்
தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச, பரிசுஷ்க பலாசாநி வநாநி உபவநாநிச” என்கிறுன்.
‘அரசனே! உனது நாட்டிலுள்ள மரங்களுங்கூட இராமனது பிரிவைப் பொறுக்க மாட்டாமல்
இளைத்துப் புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடும் வாடிவதங்கிக்கிடக்கின்றன.

கொதிக்கின்றது; காடுகளிலும் நந்த
குளங் குட்டைகளில் தண்ணீர் அடியிடமுடியாதபடி
வனங்களிலும் மரங்களின் இலைகளெல்லாம் உலர்ந்திருக்கின்றன—என்று கூறினன்.

இதைக் கூரத்தாழ்வானும் அதிமாநுஷஸ்தவத்தில் *வம்சம் ரகோ:* என்கிற ச்லோகத்
தில் *த்வத்ஸந்நிதிப்ரபவசைத்யஜுஷோ யதா ஹி வ்ருக்ஷாச்ச தாந்திமலபந்த பவத்வியோகே*
என்பதனுலருளிச் செய்தார். இப்படி, சேதநம் அசேதநம் என்கிற வாசியற ஸகல பார்த்தங்
களையும் விகாரப்படுத்துகையாகிற குணம் இராமனிடத்துள்ள தென்பதைக்கொண்டே அவனை
மஹாவீரனென்றது என்று கொள்வதும் பொருந்தும். இது வேதாந்த ப்ரக்ரியை.

---

# ஓர் ஆனந்த வியாஸம்.

மற்ற தேசங்களுக்கு இல்லாமல் நமது தேசத்திற்கே [அதாவது, தமிழ் நாட்டுக்கே]
அஸாதாரணமாக அமைந்த பெருமைகள் சிலவுண்டு; அவற்றுள் முக்கியமாக நம் பெரியார்கள்
கருதிய பெருமை என்னவென்றுல், ஆழ்வாருடைய ஈரச் சொற்கள் நடையாடும்படியான
பாக்கிய முடைமை யென்பதேயாம். திருவேங்கடமலை தொடங்கித் திருக்குறுங்குடி யள
வாக வுள்ளதொரு சிறுபகுதியில் மாத்திரமே இப்பெரும் பாக்கிய மென்னும்படியாகவுள்ளது.

திருவாய்மொழிக்கு ஈடுமுப்பத்தாறுயிரப்படி யென்னும் மிகச் சிறந்ததோர் வியாக்கி
யான மிட்டருளிய பூருவர்கள் அதன் அவதாரிகையில் திவ்யப்பிரபந்த விஷயமாகச் சில பூர்வ
பக்ஷங்களை அநுவாதம் செய்து வருகையில்—"தேசாந்தரங்களிலின்றிக்கே ப்ராதேசிகங்க
ளாகையாலும்" என்றொரு கோடியை அநுவாதம் செய்தருளியுள்ளார்கள். அதாவது ஸகல
தேசங்களிலும் வியாபியாமல் ஒவ்வொரு ஸ்வல்ப தேசத்தில் மாத்திரம் பிரசாரத்திலிருப்பதால்
திவ்யப்பிரபந்தங்கள் பிரமாணமாகமாட்டாவென்று பூர்வபக்ஷம் காட்டப்பட்டது. மேலே
இதற்குக் கண்டனம் அருளிச்செய்யும்போது=

"இப் பாஷை நடையாடி சிஷ்டப்ரசுரமான தேசங்களெங்குமுண்டாய், பாஷாந்தரங்க
ளிலே பிறந்து விலக்ஷணராயுள்ளாரும் இவற்றின் வைலக்ஷண்யத்தைக் கேட்டு இவற்றை
அப்யஸிக்கைக்கீடான இப்பாஷை நடையாடுந் தேசத்திலே பிறக்கப்பெற்றிலோமே !
என்றிருக்கையாலும்" என்றருளிச் செய்யப்பட்டிராநின்றது.

ஏறக்குறைய ஏழுநூறு வருஷங்களுக்கு முன்பு இந்த ஸ்ரீஸூக்திகள் அவதரித்திருக்
கின்றன. இப்போது நமக்குத் தெரிந்து முப்பது நாற்பது வருஷகாலமாக தேசாந்தரங்களின்
ரீதி யிருக்கும்படியை நமது பரமஸந்தோஷ பரீவாஹரூபமாக வெளியிடாதிருக்க முடியவில்லை.
கன்னடதேசம், தெலுங்கு தேசம், மஹாராஷ்ட்ரதேசம், குர்ஜரதேசம், மார்வாடம் முதலிய
பலபல தேசாந்தரங்களிலும் அந்தந்த தேசத்து ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யப்ரபந்தங்களிலே
காட்டிவருகிற ப்ரேமம் நமது தமிழ் நாட்டினரது ப்ரேமத்திற்காட்டிலும் பதின் மடங்கு
பெரிது என்றுல் இது அதிசயோக்தி யாகாது. அந்தந்த தேசங்களில் ஸஞ்சாரம் செய்து கட்
கூடாகக் காணகிற்பார்க்கு இதுவொரு பெருத்த அதிசயமாகவே தோன்றும்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்னகலியன் ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தராக எழுந்தருளி
யிருந்த ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி உத்தரதேச யாத்திரையடைவில் ப்ருந்தாவன க்ஷேத்திரத்தில்



எழுந்தருளி யிருந்தபோது, அவ்விடத்தில் மஹா வ்யாபகராக எழுந்தருளி யிருந்த ஸ்ரீமத்
கோவர்த்தனம் (பெரிய) ரங்காசாரியர் ஸ்வாமியின் தலைமை சிஷ்யராயும் சதுச்சாஸ்த்ர வித்வா
னெனப் புகழ் படைத்தவராயுமிருந்த ஸுதர்சநாசார்ய பண்டிதர் இயற்றி யிருந்த சில நிர்வேத
பத்யங்களைத் திருச்செவி சார்த்தியருளி தாரை தாரையாய்க் கண்ணீர் பெருக்கி அழுதருளின
ரென்பது ப்ரஸித்தம். அந்த நிர்வேத பத்யங்களில் விஷய மென்னவென்றுல், கேண்மின்.

"ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திகளும் நம்பிள்ளை மணவாளமாமுனிகளின் வியாக்கி
யான ஸ்ரீஸூக்திகளும் நடையாடும் தேசத்திலே என்னைப் பிறப்பியாமல் இந்த மருகாந்
தாரத்திலே பாழுந்தெய்வமே! எதற்காகப் பிறப்பித்தாய் ?"

என்று இத்தகைய நிர்வேதத்தை வகைவகையாக அமைத்துப் பல பத்யங்கள் பணித்துள்ளார்.
ப்ரார்த்தனையாகவும் சில பத்யங்கள் பணித்துள்ளார்—"எனக்குப் பரமபதம் வேண்டவே
வேண்டா ; தாம்ரபர்ணி தீரத்திலாவது காவேரி தீரத்திலாவது என்னைப் பிறப்பித்து 'நாலாயிர
பண்டிதன்' என்று நான் பேர் பெறும்படி செய்தருளியே யாகவேணும்" என்கிற பிரார்த்
தனையை வகைவகையாக அமைத்துள்ளார். இப்படியாக தேசாந்தரங்களிலே கதறுமவர்கள்
மிகப் பலர்.

திவ்யப்ரபந்தங்களும் அவற்றின் அர்த்தங்களும் முற்காலத்தில் தமிழில் மாத்திரமே
யிருந்தன; இப்போது அவை பல பாஷைகளிலும் அமைந்திருக்கின்றன. ஸம்ஸ்க்ருதம்,
ஹிந்தீ, தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கு பாஷைகளில் திருவாய்மொழியும் அதன் வியாக்
கியானமும் அச்சாகி வெளிவந்திருப்பது பெரும்பாலும் உலகமறிந்ததாகும். தெலுங்கு
பாஷையில் நாலாயிர வியாக்கியானமும் வெளிவந்துள்ளது. ஆங்காங்கு அவரவர்கள் கொண்
டிருக்கிற அபிநிவேசத்தைக் காணும்போது ஆங்கிலம் உட்பட ஸகல பாஷைகளிலும் திவ்யப்
பிரபந்த வியாக்கியானங்கள் விரைவில் வெளிவந்துலவும் என்றே தோன்ற நின்றது.

மஹாராஷ்ட்ர மண்டலத்திலுள்ள ஸோலாபூர் என்னும் நகரத்தில் ஸ்ரீலக்ஷ்மீநாராயண
மந்திரம் வெகு ஆச்சர்யமான முறையில் நடைபெற்று வருகின்றது. இவ்விடத்தில் ப்ராஹ
மண, வைச்ய பாகவதர்களில் முப்பது அத்யாபகர்கள் தேறியிருக்கிற அதிசயத்தைக் கண்டால்
"இந்தளத்தில் தாமரை பூத்தாற் போலே" என்று வேண்டா, 'இந்தளத்தில் தாமரை பூத்து
விட்டது' என்றே சொல்லலாம் இவர்கள் நித்யாநுஸந்தானமெல்லாம் சந்தை சொல்லிக்
கண்ட பாடம் செய்து ஷ ஸன்னிதியில் காலை மாலைகளில் ஸேவை சாத்துமுறைகள் நடத்தி
வருகிற அழகு தென்னாட்டிலுமில்லை யென்னலாம். இப்படி அநேக இடங்களில் பிரசார
மாகி வருகின்றது.

மார்வாடத்தில் பல ஸ்திரீகள் திருப்பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை யறு
ஸந்தானமில்லாமல் ப்ரஸாத ஸ்வீகாரம் செய்வதில்லை யென்று விரதம் கொண்டிருப்பதாகவும்,
அவை தெரியாத ஸ்த்ரீகளைத் தளிகையில் புகவிடுவதில்லை யென்று நியமம் செய்திருப்பதாகவும்
அறிகிறோம். * பொலிக பொலிக வென்கிற திருவாய்மொழியிலே ஆழ்வார் செய்தருளின
மங்களாசாஸனம் நன்கு பலித்து வருவதாகக் கண்டு மகிழ்கிறோம்.

இவ்வானந்தம் ஒருபுறமிருக்க, தெலுங்கு தேசங்களில் நைஜாம் இலாகாவில் பகவத்
விஷயாதிகாரிகளாக ஐம்பது திருநாமங்கள் தேறுவதாக ஒரு கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது.
இவர்களுக்குத் தமிழ்ப்பாஷையில் சிறிதும் பரிசயமில்லை. இப்படிப் பட்டவர்கள் ஈடு முப்பத்
தாறுயிரப்படியையும் ரஹஸ்ய வியாக்கியானங்களையும் குருமுகமாகப் பலகால் கேட்டுக்கேட்

டுத் தரித்து வைத்துக்கொண்டு ப்ரவசனம் செய்கிற அழகு அற்புதமாயிருக்கின்றது. நமது
தமிழ் நாட்டில் இப்போது பகவத் விஷயாதிகாரிகள் எத்தனை திருநாமங்கள்? என்று நோக்கி
ஞல் பரிகணிதர்களாகப் பத்தெட்டுத் திருநாமங்கள் தேறுவதற்கு சிரமப்படுகிறது. நைஜாம்
ப்ராந்தியத்தில் ஐம்பது திருநாமங்கள் புலிகளாகத் தேறியிருக்கிறர்களென்றறிந்து ஆனந்தப்
படுவதன்றி அஸூயையும் படவேண்டியதாகிறது.

இவ்வதிசயங்களெல்லாம் நாம் கர்ண பரம்பரையாகக் கேட்டெழுதுவதன்றியே கட்
கூடாகக் கண்டுகளித்து எழுதுமவையாதலால் அஸம்பாவிதத்வசங்கைக்கு அவகாசமில்லை.

பொலிக! பொலிக!! பொலிக!!!

---

# ரஹஸ்யார்த்த விசேஷம்

ஸித்தோபாய வரணத்தைக் கூறுமதான த்வய ரஹஸ்யத்தைப்பற்றி இங்குச் சிறிது பேசு
வோம்; இந்த ரஹஸ்யத்திற்கு அதிகாரிகள் கிடைப்பது அரிது. ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமுமாகிற
இரண்டுமுடையவனே த்வயாதிகாரியாவான். ஆகிஞ்சந்யமாவது—*நோற்ற நோன்பிலேன் நுண்
ணறிவிலேன்* என்கிறபடியே ஒருவிதமான கைம்முதலுமில்லாமை. அநந்யகதித்வமாவது—*புக
லொன்றில்லாவடியேன்* களைகண் மற்றிலேன்* என்கிறபடியே வேறு ரக்ஷகனை நெஞ்சிலும் நினை
யாமை. ஆக இவ்விரண்டும் வாய்க்கப்பெற்ற அதிகாரியே த்வயாதி காரியாவான்,

இரண்டு கூறுக [கண்டங்களாக] இருக்கின்ற த்வயத்தில் முதற்கண்டத்தினால்—பெரிய
பிராட்டியாரைப் புருஷகாரமாகப்பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. [ஸ்ரீமத்
என்பதனால் பெரிய பிராட்டியாரை முன்னிடுகிறது; நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே என்பத
ஞல் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது.] உத்தர கண்டத்தாலே, பெரிய பிராட்டி
யாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கரியம் பண்ணவேணுமென்கிற பிரார்த்தனை காட்டப்படுகிறது.
ஸ்ரீமதே என்று பிராட்டியுமவனுமான சேர்த்தி; நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தி கைங்கர்ய
பிரார்த்தனையைக் காட்டும். நமஸ்ஸு கைங்கர்ய விரோதி நிவ்ருத்தியைக் காட்டும்.]

ஸ்ரீ என்கிற சொல்லுக்கு ஸம்பத்து முதலியவைகளும் பொருளானாலும் இங்கே இச்சொல்
பெரிய பிராட்டியார்க்குத் திருநாமமாயிரா நின்றது. *ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:* என்கிற
ப்ரமாண வசனமும் இங்கே அநுஸந்தேயம்.

இந்த ஸ்ரீ சப்தமானது, *ச்ரீஞ்—ஸேவாயாம்* என்கிற தாதுவிலே இரண்டு வகையான
வ்யுத்பத்தியால் நிஷ்பந்நமாகும். ஸ்ரீயதே இதி ஸ்ரீ:. (இது கர்மணி வ்யுத்பத்தி) ச்ரயதே இதி ஸ்ரீ:
(இது கர்த்தரி வ்யுத்பத்தி

கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஸேவிக்கப் படாநின்றாள் என்று பொருள் படுகின்றது
ஸகல சேதநர்கட்கும் இவளைப்பற்றியே தங்களுடைய சேஷத்வரூபமான ஸ்வரூபம் ஸித்திக்குமென்ற
வாறு: கர்த்தரி வ்யுத்பத்தியில் ஈச்வரனை இவள் ஸேவியா நின்றாளென்று பொருள்படுகிறது. இவள்
தனக்கும் ஈச்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூப லாபமாயிருக்குமென்றவாறு. ஸகல சேதந
விஷயத்தில் சேஷித்வத்தையும் ஈச்வர விஷயத்தில் சேஷத்வத்தையும் உடையவள் என்று ஸ்ரீ சப்தார்த்
தம் தேறிற்றாயிற்று.

எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானுப் போலே
இவளுக்கு புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு; புருஷகாரத்வமென்கிற
தன்மையை நினைத்து இப்போது இவளைச் சொல்லுகிறது. உபாய வஸ்துவில் விசேஷணமாயிருக்கிற
தன்மையைபிட்டு இவளுக்கும் உபாயத்வமுண்டென்கிற பக்ஷம் யுக்தியுக்தமன்றென்க.



13

எம்பெருமானுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்து
கொண்டு அவனை ஆச்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம்
என்ன! என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே, ஸர்வ பூத
ஸுஹ்ருத்தானவன் திருவுள்ளத்திலே சேதனன் அளவுகடந்து பண்ணின அபராதமடியாகச் சீற்றம்
பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக.
தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜநிப்பிக்கும் இவள். ஆகையாலே
ஸம்பந்தவுணர்ச்சியுள்ளவனுக்கும் அபராதபயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை அவசியமே
யென்க.

பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோவென்னில், *அகில ஜகந்மாதரம்*
என்கிறபடியே சேதநர்கட்கு இவள் மாதாவாய், அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தம் கண்டு
பொறுத்திருக்கமாட்டாதே யிருக்கிற தொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்நியாய் *பித்தர் பனி
மலர்மேல் பாவைக்கு* என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக்கண்டு பிச்சேறித் தன் சொற்படி
நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கிற தொரு தன்மையும் உடையளாகையாலே ஒருவகையாலும்
விபலமாக மாட்டாத புருஷகாரம் உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள்
வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு
இருக்கவேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு
வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டி
யிடத்தே புஷ்கலமென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இதெல்லாம் வாஸ்தவந்தான்; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய
குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில்
பிராட்டி தான் என்னசெய்ய முடியும்! என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும்
ஆக்ஷேபமாகும். இவள் சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்துமாதம் இடைவிடாது படாத பாடுகளும்
படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை மாத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமான் "பெருமாள்
வெற்றிபெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள்வோம்'' என்று ஆறி யிருந்து, ராவணவதமான
பின்பு ஓடிவந்து "இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத்திருக்கு
மெனக்கு இடமளிக்கவேணும்" என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்மிறுங்கனை
அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம்:
அப்படிப்பட்டவிவள் *அல்லிமலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்கிறபடியே தன்
போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய், *நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக*
என்கிறபடியே 'மாயாமிருகத்தின் பின்னேபோ' என்றாலும் விளைவதறியாதே அதின்பின்னே தொடர்ந்து
போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனாயிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது
பற்றிக் கேட்கவேணுமோ?

'ஸ்ரீமத்' என்கிற பதத்தில் ப்ரக்ருதியான ஸ்ரீ என்பதன் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று.
அதன்மேல் ஏறிக்கிடக்கும் மதுப்பென்கிற ப்ரத்யயத்தின் பொருள் இனிமேல் விவரிக்கப்படுகிறது.
'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் 'மதுப்பு' வந்திருப்பதாகக்கொள்க இத்தால் புருஷ
காரபூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டென்பது
சொல்லப்பட்டதாயிற்று.

இந்த நித்ய யோகம் எப்படிப்பட்டதென்னில், ஸ்வரூபாநுபந்தித்வ ப்ரயுக்தமான நித்யயோக
மென்று கொள்ளக்கடவது. ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூப நிருபகங்
களோ அப்படி ஸ்ரீபதித்வம் நிருபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர வஸ்துவின் ஸத்தையுள
தாகக் கொள்க.

இவளுடைய குணப்ரயுக்தமாகவும் நித்யயோகமுண்டு; அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க
வல்லவனை ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தையும் சேதனர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமை

யையுங்கண்டு 'ஐயோ என்னாகுமோ!' என்கிற பயத்தாலே ஈச்வரனை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள்.

இப்படி இவளிருந்து நோக்குகையாலே, ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை.

அன்றியும், பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில், எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாம் என்பது தேறிற்றாகும். 'புருஷகாரம் செய்பவள் அருகேயிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்க வேணுமென்கிற ருசி பிறக்கவேண்டுவதத்தனையே.

பிராட்டியின் புருஷாகாரம் அவசியம் வேண்டியதேயென்பதை விபவாவதாரகாலத்துச் செய்தியாலும் தெரிந்து கொள்ளலாம்; ராமாவதாரத்தில், அளவுகடந்த அபராதத்தைச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய்த் தலையறுப்புண்ண வேண்டின காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனது பிராட்டியின ஸந்நிதியினாலேயாம், அவ்வளவு அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவளுடைய ஸந்நிதி யில்லாமையினாலேயாம். ஆகவே பிராட்டியின் ஸந்நிதானம் பழுதுபடாதென்று உணர்க.

---

# பக்த பாலகன் பெற்ற பேறு

மதுரைமாநகரில் ஒரு ஏழைக் குடும்பம். பரம்பரையாகவே கிருஷ்ண பக்தி குடிகொண்ட உயர்ந்த குடும்பம். தந்தையை யிழந்து தாயை மாத்திரம் தஞ்சமாகக்கொண்ட ஒரு சிறு குமாரன் செல்வனென்னும் பெயருடையான் வளர்ந்துவருகிறான். ஆறேழு வயதாய்விட்டது. இவனுடைய படிப்புக்கு அவ்வூரில் ஒருவிதமான ஸௌகரியமும் இல்லை; ஏனெனில் சம்பளம் கட்டியே வாசிக்கவேண்டியதாக இருந்தது. சாப்பாட்டுக்கே மிகவும் சிரமப்படும் குடும்பமாதலால் சம்பளங்கட்டி வாசிப்பிக்க சக்தியற்றவளாயிருந்தாள் தாய். ஆனாலும் படிப்பிக்க வேண்டியது மிகவும் அவசியமாக இருந்ததனால் அவ்வூர்க்கு மூன்று மைல் தூரத்தில் ஒரு கிராமத்தில் ஒரு பெரியவர் தமது இல்லத்திலேயே பல பிள்ளைகளுக்கு இலவசமாய் [தருமமாக] படிப்பு சொல்லித் தருகிறாரென்றறிந்த தாயானவள் குமாரனை அவ்விடம் சென்று படித்துவரும்படி கட்டளையிட்டாள்.

மூன்று மைல்தூரம் போகவேண்டியிருந்தபடியாலும் பயங்கரமான காட்டுப்பாதையாக இருந்தபடியாலும் தன்னோடு கூட அவ்விடம் வாசிக்கவரும் மாணாக்கன் வேறொருவனும் இல்லாதிருந்தபடியாலும் செல்வன் தனியாய்ச் செல்வதற்கு அஞ்சி அநுதினமும் தன்னோடுகூட ஒரு சேவகனைத் துணையாக அனுப்பும்படி தாயை வேண்டினான். அதற்கு அவள் 'அப்பா! சம்பளமில்லாமல் சேவகன் துணைவருவானா? தினமும் உன்னோடு போகவும் வரவும் நாலைந்து ரூபாயாவது மாதச் சம்பளமில்லாமல் ஒருவனும் இசையமாட்டான்; இவ்வூரிலேயே உள்ள பள்ளிக்கூடத்தில் மாதம் ஒரு ரூபாய் சம்பளம் கட்ட முடியாமலன்றோ உன்னை நான் வெளியூருக்குப் போகச் சொல்லுகிறேன்; நாலைந்து ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? நீ எப்படியாவது தனியாகத்தான் சென்று வாசித்து வரவேண்டும்' என்றாள்.

அப்படியே யென்று தாயை வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்ட செல்வன் சிறிது தூரம் சென்று உடனே திரும்பிவந்து 'அம்மா! வழி கொடிய காடாக இருக்கின்றது; ஆடுகளும் மாடுகளும் தவிர மனிதன் ஒருவனும் தென்படவில்லை; மிகவும் அச்சமாயிருக்



15

கிறதே, நான் எப்படிச் செல்வேன்; என்று அழுது நின்றான். அதற்குத் தாய் சொன்னாள்— 'குழந்தாய்! அழாதே, அஞ்சாதே, உன்னுடைய அண்ணன் ராதாரமணன் என்பவன் வழியில் இருக்கிறான்; 'அண்ணா ராதாரமணா' என்று நீ அழைக்கும்போது அவன் தவறாமல் உன்னிடம் வந்து சேருவன். அவ்வூர் எல்லையில் உன்னைக் கொண்டுவிட்டு அவன் திரும்புவான். மறுபடியும் மாலைப்பொழுதில் நீ திரும்பி இவ்விடம் வரும்போது அவ்வண்ணமே அழைத்தாயாகில் வருவான்; அவனைத் துணைகொண்டு போய்வா' என்றாள். இவள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடத்தில் திடமான பக்திபூண்டவளாதலால் அந்த பரமாத்மாவையே அண்ணன் ராதாரமணனென்று குறிப்பிட்டாள். ஏழைக்கு இரங்கும் அவன் நம் குழந்தைக்கு அவசியம் துணை புரிவான் என்று நம்பியே குமாரனுக்கு இங்ஙனம் கூறினள்.

தாய் சொற்படியே திரும்பி நடந்த செல்வன் காட்டினருகிற் சென்றவாறே அச்சம் தோன்ற, 'அண்ணா ராதாரமணா!' என்று உரக்க அழைத்தான். உடனே பகவான் ஒரு சிறுவனாகவந்து இவனுக்குத் துணைபுரிந்து அவ்வூரெல்லையிலே கொண்டுசேர்த்து 'தம்பீ! போய்வருகிறேன்' என்று திரும்பிமறைந்தான். செல்வன் வாசித்துவிட்டு மாலைப்பொழுதில் திரும்புகையில் காட்டிடம் வந்தவாறே பழையபடியே 'அண்ணா ராதாரமணா!' என்றழைக்க, முன்போலவே பகவான் வந்து துணை புரிந்தான். இப்படியே தினப்படியாய் நிகழ்ந்து வருகின்றது.

நாலாறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் உபாத்தியாயர் எல்லா மாணாக்கர்களுக்கும் ஒரு கட்டளையிட்டார்; அதாவது—'நாளது ரேவதீ நக்ஷத்திரத்தில் எனக்கு அறுபதாண்டு நிறைவுவிழா வருகிறது; அதற்காக நீங்களெல்லாரும் உந்தம் சக்திக்குத்தக்கபடி ஏதாவது பரிசு கொண்டு கொடுப்பது நலம் என்றார். ஒவ்வொரு மாணாக்கனும் வேஷ்டியும் சால்வையும் வெள்ளிப்பாத்திரங்களும் ரூபாய்களுமாகக் கொணர்ந்து கொடுத்துக் கொண்டிருக்கிறபடியைக் கண்ட செல்வன் தானும் ஏதாவது கொணர்ந்து ஸமர்ப்பித்து உபாத்தியாயரை உகப்பிக்கவேணுமென்றெண்ணித் தன் தாயிடம் செய்தியைச் சொல்லி 'அம்மா! ஏதாவது கொடு' என்று கெஞ்சிக்கேட்டான். உண்மையில் அவளிடம் ஒன்றுமில்லாமையாலே அதை உள்ளபடி சொல்லி, குழந்தாய்! நித்தியமும் நீ தனியே போகிறாயா? துணையோடு போகிறாயா? என்று கேட்டாள்; அதற்கு அவன் 'அம்மா! என்னால் தனியாகப் போக முடியுமா? நீ சொன்னபடியே அண்ணன் ராதாரமணனை யழைக்கிறேன், அவன்தான் இரண்டு வேளையும் தவறாது வந்து துணைபுரிகின்றான்' என்று கூறினன். அது கேட்ட அவள், 'அப்படியா? இன்று போகும்போது அவனையே கேட்டுப்பார்; ஏதாவது கொடுப்பன், அதைக் கொண்டு போய் உபாத்தியாயரிடம் கொடு' என்றாள்.

அப்படியே செய்கிறேனென்று சொல்லிப் புறப்பட்ட செல்வன் வழக்கப்படியே வழியில் அண்ணனையழைக்க, அவன் வந்து தோன்றினவாறே தனது கோரிக்கையைச் சொல்லிக் கொண்டான். அதுகேட்ட ராதாரமணன் பசும்பால் நிரம்பிய ஒரு சிறு குடுவையைச் செல்வனிடம் கொடுத்து 'செல்வா! இதிலுள்ள பாலைமாத்திரம் உபாத்தியாயருக்கு ஸமர்ப்பித்துவிட்டுக் குடுவையைத் திரும்ப வாங்கி வந்து என்னிடமே கொடு' என்றுசொல்லி, துணை வந்து திரும்பிவிட்டான்.

வெறுங்கையோடு போகாமல் இதுவாவது கொண்டுபோகப் பெற்றோமேயென்று பெருங்களிப்புக் கொண்ட செல்வன் உபாத்தியாயரிடம் சென்று இதைப் பெற்றுக்கொள்ள வேணுமென்றான். பிறர் பலர் அநவதிகமாகக் கொணர்ந்து கொடுக்கும் சிறந்த பரிசுகளை

ஆனந்தமாக வாங்கி வாங்கி வைத்துக் கொண்டிருக்கின்ற அவர் இச்சிறுவன் காட்டும் பால் குடுவையைக் கண்ணெடுத்தும் பார்க்க வில்லை. இவனு பதைக்கிறுன். பிறகு இச்செல்வ னது நிர்ப்பந்தம் பொறுக்க மாட்டாத அவர் ஒரு பரிசாரகனை விளித்து இந்தப் பாலை வாங்கிச் சேர்த்துக் கொண்டு குடுவையைக் கொடுத்துவிடு என்று கட்டளையிட்டார்.

அவன் செல்வனையழைத்துக் கொண்டுபோய் ஒரு பாத்திரத்தில் பாலைக் கொட்டிக் கொண்டு குடுவையைக்கொடுக்கையில் அதில் பால் அப்படியே யிருப்பதாகக் காண்கிறது. எத்தனைதடவை கொட்டினும் பால் அப்படியே காண்கிறது. பல அண்டாக்கள் பாலால் நிரப்பப்பட்டு விட்டன; மேலே பாத்திர மில்லாமையினலே அவன் மிகவும் வியந்து இவ்வதி சயத்தை உபாத்தியாயரிடம் வந்து தெரிவித்தான். அவரும் கண்டு ஆச்சர்யப்படுகிறுர். விஷ யம் இன்னதென்று விளங்கவில்லை! 'பையா! இந்தப்பால் எங்கிருந்து கொண்டுவந்தாய்?' என்று செல்வனையே கேட்கிறுர். 'என் அண்ணன் ராதாரமணன் கொடுத்தது' என்கிறுன். அண் ணனும், ராதாரமணனுமேயாவன்? என்று விசாரிக்கையில் இவனுக்கு ஸகோதரனே கிடையா தென்று பலரும் கூறினர். பிறகு செல்வனை விரிவாக விசாரித்ததில், முதலே பிடித்து வரலாற் றைக் கூறினன் செல்வன். 'பகவானே அவன்' என்று தெரிந்துகொண்ட உபாத்தியாயர், அன்று நடைபெறவேண்டிய ஷஷ்டியப்தபூர்த்திக் கொண்டாட்டத்தில் சிறிதும் விருப்பமற்றவ ராய், அந்த 'அண்ணன்ராதாரமணனை' எப்படியும் காணப்பெற வேணுமென்று ஆவல் கொண் டார். 'செல்வா! உன் அண்ணனை எனக்குக் காட்டுகிறுயா?' என்றுர். வழக்கம்போல் அழைத்தால் அண்ணன் வருவானென்று நினைத்து, ஆகா, அவசியம் காட்டுகிறேன் என்றுன்.

இருவருமாய்ப் புறப்பட்டு வருகிறுர்கள்; வழக்கமான இடத்தில்வந்து 'அண்ணுராதா ரமணு!' என்றழைக்கிறுன் செல்வன். அன்று ராதாரமணன் வரவேயில்லை. எத்தனை தடவை கூவியழைத்தும் வந்திலன். செல்வன் இன்று துணையோடு வந்திருப்பதனுல் நாம் வந்து துணைபுரியவேண்டிய அவசியமில்லை என்று கருதினன் போலும். பக்தியற்றவரான உபாத்தி யாயருக்குக் காட்சி கொடுக்கக் கருதிற்றிலன் போலும். 'மஹாபாபியான நான் இருக்கிற வரையில் உன் அண்ணன் வரமாட்டானப்பா!' என்று சொல்லிப் புலம்பிக்கொண்டே திரும்பி னர் உபாத்தியாயர்.

அவர் கண்மறையச் சென்றவாறே வந்து சேர்ந்தான் ராதாரமணன். 'அண்ணு! என் உபாத்தியாயர் உன்னைக் காணவேண்டி வந்தாரே; நீ ஏன் இதுவரை வரவேயில்லை? அவர் அழுதுகொண்டே போகிறுரே!' என்று சொல்லி இவனும் அழத்தொடங்கினன். இவனு டைய அபிமானத்தில் இணங்கியவர் என்ற காரணத்தினுல் அவர்க்கும் காட்சி தருவோமென் றிரங்கினுனெம்பெருமான். அழைத்துக் காட்சி தந்து, செல்வனையும் வித்தியாநிதியாக அநுக்ர ஹித்து மறைந்தனன்.

இது ஸாதாரணமான வொரு கதையாயிருந்தாலும் இதிலிருந்து பக்தர்கள் அறியக்கூடிய சாஸ்த் ரார்த்தங்கள் பலவுள்ளன. அவற்றை விவேகிகள் உய்த்துணரவேண்டும்.

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு

மலைநாட்டுத்திருப்பதியாத்திரையென்கிற வியாஸம் அடுத்தபடியாக வெளிவருகின்றது. அதனை பக்தர்கள் யாவரும் படித்துக்களிப்பது அவசியம்.

ஸ்ரீ:

# மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை.

(ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.)

நம் ஆழ்வார்களின் பாடல்பெற்ற திவ்யதேசங்கள் மலைநாட்டில் பதின்மூன்று உள்ளன. மலையாள தேசமே மலைநாடென்பது. மலையாள மென்பதற்கு யாது பொருளென்னில்; ழகாரளகாரங்களை அபேதமாகப் பலர் வழங்குவர்; வாளப்பளம், வாளித்திருநாமம் என்பன போன்ற வழக்குக்கள் பலவுண்டே; அவ்வகையில், மலையாழம் என்பதே மலையாளமென வழங்கப்பட்டு வருகின்றதாம். ஒருபுறம் மலையாகவும் மற்றொருபுறம் ஆழமான பாதாளமாக வும் காணப்படும் தேசமானதுபற்றி மலையாழமென்னப்பட்டு வந்தது. அதுவே வழக்கில் மலையாளமாயிற்று. இத்தேசத்திலுள்ள திவ்யதேசங்களை மலைநாட்டுத் திருப்பதிகளென்றே ஸம்ப்ரதாயத்தில் வழங்குவது.

நம்மாழ்வார் குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய மூவரே மலைநாட்டுத் திருப்பதிகளைப்பாடினவர்கள். நம்மாழ்வார் பாடினவை பன்னிரண்டு திருப்பதிகள்; குலசேகராழ்வார் பாடினது ஒரு திருப்பதியே; நம்மாழ்வார்பாடின 12 திருப்பதிகளுள் மூன்று மாத்திரம் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவை.

திருநாவாய், திருமூழிக்களம், திருவல்லவாழ் ஆகிய இம்மூன்று திருப்பதிகள் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவை.

திருக்காட்கரை, திருக்கடித்தானம், திருவண்வண்டூர், குட்டநாட்டுத் திருப்புலியூர், திருவாறன்விளை, திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு, திருவனந்தபுரம், திருவாட்டாறு, திருவண்பரிசாரம் ஆகிய ஒன்பது திருப்பதிகள் நம்மாழ்வாரால் மாத்திரம் பாடப்பெற்றவை.

திருவித்துவக்கோடு ஒன்று குலசேகராழ்வாரால் மாத்திரம் பாடப்பெற்றது.

ஆக இப்பதின்மூன்று திவ்யதேசங்களும் மலைநாட்டுத் திருப்பதிகளாகும். திவ்யப்பிரபந்தங்களில் மிக்க ஈடுபாடுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் தவிர மற்றையோர்கள் இத்திருப்பதிகளின் பெருமைகளை யறியமாட்டார்கள். திவ்யப்ரபந்தம் வல்ல ஸ்ரீ வைஷ்ணவர்களிலுங்கூட இத்திவ்யதேசங்களின் அருமை பெருமைகளையறிந்து ஈடுபடுவார் மிகச்சிலரே. இத்தலங்கள் இன்னவிடத்திலிருக்கின்றன வென்பதே பலர்க்குத் தெரியாது. அது தெரிந்தாலும், நம் நாட்டுக் கோவில்கள்போலல்லாமல் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாதாருடைய ஆக்ரமணத்திலிருப்பதுபற்றி இவற்றை நாம் ஸேவிக்கவேண்டிய அவச்யமென்ன? என்கிற உபேக்ஷையுடையார் பலர். ஆகவே இப்பதின்மூன்று திவ்யதேசங்களை விரும்பி ஸேவிப்பார் மிகச்சிலரேயாயினர். சிலர் என்பதேன்? இலர் என்றேசொல்லலாம்.

மலைநாட்டுத் திருப்பதிகளுள் தலைமைபெற்ற திருவனந்தபுரத்திற்குப் பதிகம்பாடா நின்ற நம்மாழ்வார் *படமுடை யரவில் பள்ளிபயின்றவன் பாதங்காண நடமினோ நமர்களுளீர் நாமுமக்கறியச்சொன்னோம்* என்றருளிச் செய்திருப்பதை ஊன்றி நோக்குமிடத்து ஒரு அபிப்ராயம் நமக்குத் தெரியவருகிறது; கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திவ்யதேசங்கள் போலல்லாமல் விஜாதீயப்ரக்ரியையிலே யிருக்கின்ற இத்திவ்ய தேசத்தை

ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸேவிக்க விரும்பமாட்டார்களென்று பண்டே ஆழ்வார் திருவுள்ளத்தில் தோன்றவேதான் இங்ஙனே பாசுரம் அவதரித்தது. நடமினோ நமர்களுள்ளீர்! நாமுமக்கறியச் சொன்னோம்='ஆழ்வாருடைய ஸம்பந்தம் நமக்கு உத்தேச்யம்' என்றிருந்தீர்களாகில் நீங்கள் திருவனந்தபுரம் சென்று ஸேவிக்கவேவேணும் என்று நியமித்தருளுகிறாரென்று அறியக்கிடக்கிறது. இந்த நியமனம் திருவனந்தபுரத்திற்கு மாத்திரமென்று கொள்ளலாகாது; இதைச்சேர்ந்த மற்றைத்திருப்பதிகளுக்குமென்க. ஆகவே ஆழ்வாருடைய ஸம்பந்தமே நமக்கு நிதியானதென்று திண்ணமாக எண்ணுமவர்கள் மற்றைத் திவ்யதேசங்களிற் போலவே இம்மலைநாட்டுத் திருப்பதிகளிலும் அபிநிவேசங்கொள்வது அவசியமாகும். திருவரங்கம் பெரியகோயிலில் பெரியதிருவத்யயநோத்ஸவத்தில் "நடமினோநமர்களுள்ளீர்" என்கிற பாசுரத்தை அரையர் ஸேவிக்கக் கேட்டிருந்த ஆளவந்தார், * நமர்களுள்ளீர்' என்ற சொல்லின்பத்தை நோக்கியே, திருவனந்தபுரத்தை ஸேவிக்காவிடில் நமக்கு ஆழ்வார் ஸம்பந்தம் இல்லையாய்விடுமோவென்று அதிசங்கித்தே உடனே புறப்பட்டுத் திருவனந்தபுரயாத்திரை யெழுந்தருளினாரென்று காண்கிறோம்.

எம்பெருமானை * பதியே பரவித் தொழும் தொண்டர் தமக்குக் கதியே! * என்று திருமங்கையாழ்வார் விளிக்கிறார். *உலகமேத்துங் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே?* என்று, திவ்ய தேசங்களில் ஈடுபடாதவர்களுக்கு உய்யும் வகை இல்லையென்றும் அவ்வாழ்வார்தாமே யருளிச் செய்கிறார். இக்காலத்தில் சில உபாதி விசேஷங்களால் திவ்ய தேசங்கள் வைதிகர்களுக்குப் பரித்யாஜ்யங்களாயின வென்று சிலர் கொண்டாலும் ஆழ்வார்களின் ஈரச்சொற்களாலே போதுபோக்கும் பாக்கியமுடைய பரமரஸிகர்கள், திவ்யதேசங்களிலே வெறுப்புக் கொண்டு நிந்தையும் செய்துகொண்டு, ஆழ்வார்களிடத்திலும் அவர்களது திவ்ய ஸூக்திகளிலும் தங்களுக்கு அபாரமான ப்ரேம மிருப்பதாக அபிநயிப்பதானது அர்த்தமற்றதாதலால் அன்னவர்களை இங்கு நாம் ஸ்மரிப்பதே அநுசிதம். * சூழ்ந்து நின்ற மால் விசும்பில் தொல்லை வழிகாட்ட, ஆழ்ந்தகனை முற்றமனுபவித்து, வாழ்ந்தங்கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான், முடிமகிழ் சேர்ஞான முனி * என்று மணவாளமாமுனிகளருளிச் செய்தபடியே நம்மாழ்வார்க்குப் பரமபதத்திலனுபவம் செல்லா நின்றபடியை விவரிப்பதான * சூழ்விசும் பணிமுகில் * என்னுந் திருவாய்மொழியில் திவ்யதேச ப்ரஸ்தாவம் செய்ய வேண்டிய ப்ரஸக்தியே கிடையாது; *நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம் * [நோவஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்] என்று உபநிஷத்து ஓதினபடியே இவ்விருள்தருமா ஞாலத்தின் ஞாபகமே வரவேண்டாத விடமன்றோ பரமபதம்; அப்படிப்பட்ட திருநாட்டில் அங்குள்ளவர்கள் நம்மாழ்வாரை என்னவென்று சொல்லி ஸத்கரித்தார்கள் தெரியுமோ? * மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும், தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர், தொடுகடல் கிடந்தவெங் கேசவன் கிளரொளி மணிமுடி, குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே * என்ற பாசுரம் என்ன ஆச்சரியமாயமைந்தது! "திருக்குடந்தைத் திருப்பதியிலே யீடுபட்ட பெரியார் வந்தார்" என்று சொல்லி வழிபாடுகள் செய்தார்களாம்; இப்படியன்றோ நம்மாழ்வாருளிச்செய்கிறார். ஆகவே திருநாட்டிலும் மறக்கமுடியாததாய் விடவொண்ணாததான திவ்யதேசாநுபவத்தை இந்நாட்டிலேயே விட்டுவிட மனமிசைந்து நிற்கும் மஹாநுபாவர்களைப்பற்றி நமக்கென்ன விசாரம்.

நம்மாழ்வார்க்கு மற்றைத்திருப்பதிகளிலநுபவங்களெல்லாம் ஒரு தட்டாய் மலைநாட்டுத் திருப்பதிகளிலனுபவம் மாத்திரம் ஒரு தட்டாய்க் காண்கையாலே இத்திருப்பதிகளைச் சென்று ஸேவித்துக் களிக்கவேணுமென்கிற குதூஹலம் அடியேனுக்குண்டாயிற்று. இத்திருப்பதிகளை அடியேன் 35 ஆண்டுகட்கு முன்பு ஒரு விசையும், 22 ஆண்டுகட்கு முன்பு மற்றொரு விசையும் ஸேவித்திருந்தாலும் அது ஸ்வப்நகல்பமாய்விட்டபடியாலே இப்போது மொருவிசை ஸேவிக்கவேணுமென்கிற அபிநிவேசம் அளவுகடந்து உண்டானதனால் 25—1—51 தேதியிலிருந்து இருபது நாள் இத்திவ்யதேச யாத்திரைசெய்து பேரின்ப வெள்ளத்திலாழ்ந்திருக்க ப்ராப்தமாயிற்று. அடியேன் ஸ்ரீ பதரிகாச்ரமயாத்திரை செய்த போது வடநாட்டுத் திருப்பதிகளின் விசேஷங்களையெல்லாம் ஸம்ஸ்க்ருதம், தமிழ், ஹிந்தி, தெலுங்கு ஆகிய நான்கு பாஷைகளிலும் வெளியிட்டேன்; அப்புத்தகங்கள் பலருடைய யாத்திரைக்குக் கைவிளக்காயிருப்பதாக அடிக்கடி பல ஆப்தர்கள் தெரிவிக்கின்றார்கள்; அப்படியே இச்சிறுயாத்திரையைப்பற்றியும் ஒரு சிறுபுத்தகம் வெளியிட்டால் பலர்க்கும் பயன்படுமென்று தோன்றி இஃதெழுதி வெளியிடுகின்றேன்.

உண்மையில் மலைநாட்டுத் திருப்பதிகளின் ஸந்நிவேசம் தென்னாட்டுத் திருப்பதிகளில் ஈடுபட்ட நம்போல்வார் உகக்கும்படியான ரீதியில் இல்லை; கோவில்களின் அமைப்பும் ஒருவிதம்; அங்குள்ளார்படிகளும் விஜாதீயம்; ஆனாலும் ஆழ்வார்களின் மங்களாசாஸனங்களை விசேஷமாகப் பெற்றது காரணமாகவே இத்தலத்தெம்பெருமான்கள் அடியேன்போல்வாருடைய உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் விதம் எழுதிமுடியாது. அருளிச்செயல் கோஷ்டிகளில் ஒரு குட்டநாட்டுத் திருப்புலியூர் ஒரு திருவாறன்விளை, ஒரு திருக்கடித்தானம், ஒரு திருக்காட்கரை, ஒரு திருவாட்டாறு இப்படிப்பட்ட திருப்பதிகள் விஷயமான திருவாய்மொழிகளை ஸேவிக்குங்காலங்களிலும் அவற்றைப்பற்றி உபந்யஸிக்க நேருங்காலங்களிலும் அடியேனுள்ளம் படும்பாடு அந்தர்யாமியொருவனுக்கே அறியவெளிதாம். *உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர்சோர நிற்கும் நிலை பரவசமாக வந்தெய்தும். அப்படிப்பட்ட திவ்யதேசங்களை இப்போது குழாங்களுடன் கூடி ஸேவிக்க ப்ராப்தமாயிற்று.

ஸ்ரீ வைஷ்ணவர்களாய்ப் பிறந்து ஆழ்வாருளிச் செயல்களில் அபிநிவேசமும் அவகாஹனமுமுடையரான அனைவரும் இத்திவ்விய தேசங்களை ஸேவித்தே பிறவிப்பேறு பெறவேணுமென்கிற அத்யவஸாயங் கொண்டே அடியேன் இந்த யாத்திரைக் குறிப்பை வெளியிடுகின்றேன். இத்திருப்பதிகட்கு வழியடைவு நன்கு தெரியுமாறு செய்வதே இவ்வெளியீட்டிற்கு முதற்பயன். மற்றும் பல விசேஷங்களையும் ஸ்வாநுபவத்தையொட்டித் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதற்கு முன் இரண்டு முறை இத்தலங்களை அடியேன் ஸேவித்தபோது ஆழ்வார்திருநகரி வானமாமலை திருக்குறுங்குடி ஸேவித்துக் கொண்டு, திருவண்பரிசாரம் திருவாட்டாறு திருவனந்தபுரம் ஸேவித்து ஜனார்த்தனம் வழியாய் கொட்டாரக்கரையென்கிற ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு, திருவண்வண்டூர், குட்டநாட்டுத் திருப்புலியூர், திருவாறன்விளை, திருவல்லவாழ், திருக்கடித்தானம் இவை ஸேவித்துக் கொண்டு, செங்கணாஞ்சேரி, ஆலப்புழை, வழியாய் எர்ணாகுளம் சேர்ந்து திருக்காட்கரையும் திருமூழிக்களமும் ஸேவித்துக் கொண்டு ஷோரணூர் சேர்ந்து, அங்கிருந்து கள்ளிக்கோட்டை (கோழிக் கூடு) வழியில் திருவித்துவக் கோடும் திருநாவாயும் ஸேவித்து, போதனூர் வழியாய் காஞ்சீபுரம் சென்று சேரலாயிற்று. இப்போது நடந்த யாத்திரை அவ்விதமல்லாமல் திருவித்துவக்கோடு முதலாக நடந்தேறியது. இந்த யாத்ராக்ரமங்களை அடைவே விவரிக்கிறேன்.

25—1—51 தேதியன்று தையில் மகம். அன்று ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமானுக்கும் திருமழிசைப் பிரானுக்கும் நடைபெற்ற பைந்நாகப் பாய்சுருட்டி மஹோத்ஸவத்தைப் பரிபூர்த்தியாக அநுபவித்து விடைபெற்றுக்கொண்டு யாத்திரை புறப்பட்டேன். சென்னை மாநகரில் பரம பக்தாக்ரேஸராக விளங்கும் ஸ்ரீமான். உ. வே. மங்கலம் ராமாநுஜாசாரியர் ஸகுடும்பமாக இந்த யாத்திரையில் அந்வயித்தார். மற்றும் அடியேனுடைய ஸௌகர்யார்த்தமாக ஸ்ரீமான். உ. வே. அகரம் அனந்தாசாரியர், கிடாம்பி. ஸ்ரீநிவாஸவரதன், ஸ்ரீபெரும்பூதூர் திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸன் முதலான சிலரும் அந்வயித்தனர். கோயமுத்தூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் உ வே. வேதவ்யாஸபட்டர் திருமலாசார்யஸ்வாமியும், C. R. ராமஸ்வாமி ஐயங்கார் (அட்வொகேட்) ஸ்வாமியும் இந்த யாத்திரையில் கலந்து கொள்வதாகத் தெரிவித்திருந்தபடியால் முதன் முதலாகக் கோயமுத்தூர் சென்று சேரலாயிற்று. அங்கு அவ்விரண்டு ஸ்வாமிகளும், பரம பக்த மணிகளான புருஷோத்தம நாயுடு, V. துரைஸாமி நாயுடு அவர்களும் உடன் கூட 26—1—51ல் அங்கிருந்து புறப்பட்டு அன்று மாலை திருவித்துவக்கோடு ஸமீபம் சேர்ந்தோம்.

## 1. திருவித்துவக்கோடு.

இது குலசேகராழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருப்பதி. திருமிற்றக்கோடு என்று வழங்குவர். ஷோரனூர் ஜங்ஷனிலிருந்து காலிகட் (கோழிக்கூடு) போகும் லயனில் மூன்றாவது ஸ்டேஷன் பட்டாம்பி. அங்கேயிறங்கி ஸ்டேஷன் ஸமீபத்திலேயே மிகப் பெரிய தரும சாலையில் சுகமாகத் தங்கினோம். இத்தரும சாலையானது நிலா என்னும் பெரிய நதியின் கரையிலுள்ளது. தருமசாலையிலிருந்தே இதற்குப் படித்துறையுள்ளது. இந்த நதி பாரதப்புழையென்றும் வழங்கப்படும். இந்நதியின் அக்கரையிலுள்ளது திருவித்துவக்கோடு; ஆனால் நதியிலேயே ஒன்றரை மெயில் தூரம் நடந்து செல்லவேணும். பிறகு கரையேறினால் கரையிலேயே இத்தலத்தைக் காணலாம். இங்கு ஒரு பக்கம் சிவபிரானுடைய சன்னிதானமும் காண்கிறது.

இந்த யாத்திரையில் ஒவ்வொரு திவ்யதேசத்திலும் திருப்பல்லாண்டு திருப்பாவை கண்ணிநுண்சிறுத்தாம்புடன் அந்தந்த திவ்யதேச விஷயமான பதிகமும் கோஷ்டியாக ஸேவித்து சாத்துமுறை செய்தோம். ஸ்தலாதிகாரிகள் இதற்கு மிகவும் உகந்திருந்தார்கள். இத்தலங்களில் ஸேவிக்கச் செல்லும் பக்தர்களும் ஸ்தலப்பாசுரங்களை ஆங்காங்கு அநுஸந்திக்கவேணுமென்கிற ஆசையினால் இந்த வியாஸத்தின் முடிவில் அநுபந்தமாக அப்பாசுரங்களையெல்லாம் சேர்ப்போம்.

திருவித்துவக்கோட்டெம்பெருமானை ஸேவித்துவிட்டு மீண்டும் பட்டாம்பி தரும சாலைக்கே வந்து சேர்ந்தோம். பட்டாம்பி ஸமீபத்தில் பெருமுடியூர் என்னுமிடத்தில் ஒரு ஸம்ஸ்க்ருத காலேஜ் உள்ளது. அதற்குத் தலைவராய் விளங்கும் ப்ரஹ்மஸ்ரீ. K. V. நாராயண சாஸ்திரியாரவர்கள் நமக்கு ஸகலவித ஸௌகரியங்களையும் பரமப்ரீதியுடன் செய்து கொடுத்து இரண்டு நாள் உடனிருந்து உதவிகள் செய்தது நீடூழி நினைக்கற்பாலது.

## 2. திருநாவாய்.

இது நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்யதேசம். நம்மாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். திருமங்கையாழ்வார் * நாவாயுளானை நறையூரிற்கண்டேனே * என்றார். வானமாமலை என்ற எம்பெருமானுடைய திருநாமமே சிரீவரமங்கலநகர்க்கு வழங்கப்பட்டதுபோல இங்கும் நாவாய் என்று எம்பெருமானுடைய பெயரே ஸ்தலத்திற்கு வழங்கப்பட்டதாக ஆசார்யஹ்ருதயகாரர் திருவுள்ளம்பற்றியதை மணவாளமாமுனிகள் விவரித்தருளியுள்ளார். வடமொழி நூல்களில் எம்பெருமானை விஷ்ணுபோதம் என்று நாவாயாக [தோணியாக]ச்சொல்லியிருப்பதால் இங்குள்ள எம்பெருமான் அத்திருநாமம் பெற்றானென்க.



கீழே தெரிவிக்கப்பட்ட பட்டாம்பி ஸ்டேஷனிலிருந்து நான்காவது ஸ்டேஷன் எடக்கோலம் என்பது. அந்த ஸ்டேஷனிலிறங்கி முக்கால் மெயில்தூரம் சென்றால் நிலாநதியின் இக்கரையிலேயே இத்தலத்தைக்காணலாம். ஸன்னிதி பரமவிலக்ஷணமாகவுள்ளது. இங்கிருந்து மறுபடியும் பட்டாம்பி தருமசாலைக்கே சென்று சேர்ந்தோம்.

அங்கிருந்து குருவாயூர் என்கிற க்ஷேத்திரம் 20 மெயில் தூரத்திலுள்ளது. இது ஆழ்வார் பாடல்பெற்ற தலமன்றாகிலும் கண்ணபிரான் அற்புதமாக ஸேவைஸாதிக்கும் திவ்யஸ்தலம். இந்த ப்ராந்தத்திலுள்ளவர்கள் இத்தலத்தை மிகமிகக் கொண்டாடுகிறார்கள். பெரிய ஸன்னிதானம். பரமவைதிகர்கள் இங்கு விளங்குகின்றார்கள். (பஸ் மார்க்கமாக வந்து) இத்தலத்தையும் கண்டு களித்தோம். 360 வருஷங்களுக்கு முன்பு திருநாவாயில் நாராயணபட்டத்ரீ என்றொரு பண்டிதர் இருந்தார். அவர் அலங்காரம் வியாகரணம் முதலான சாஸ்த்ரங்களில் மிகவல்லவர். அவர் இத்தலத்துப் பகவான் விஷயமாய் மிக அற்புதமாக ஆயிரத்து முப்பத்தாறு ச்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரமொன்று பணித்துள்ளார். அது நாராயணீயமென்று ப்ரஸித்தம். வியாக்கியானத்தோடுங்கூட திருவனந்தபுரத்தில் தேவநாகரலிபியில் அது அச்சிடப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் ஸ்ரீ பாகவதமே இந்நூலாக வடிவெடுத்ததென்னலாம். சொல்நோக்கும் பொருள்நோக்கும் வெகு ஆச்சரியமாக அமைந்துள்ளது. அத்துதிநூலை நாம் ஏற்கெனவே அநுபவித்திருந்தபடியாலும் இத்தலத்தைப் பற்றி மிக மிகக் கேட்டிருந்தபடியாலும் இங்கும் சென்று மகிழ்ந்தோம். இவ்விடத்தில் ஸ்தல ஜலஸௌகரியங்கள் நன்றாகவுண்டு.

## 3. திருமூழிக்களம்.

குருவாயூரிலிருந்து பஸ்மார்க்கமாக இரண்டுமணி காலத்தில் திருச்சூர் வந்து சேர்ந்தோம். ~~இங்குச் சில ஸம்ஸ்க்ருத வித்வான்கள் பரிசிதர்களும் ஆப்தர்களுமாதலால் அவர்கள் திருப்பத்திற்கிணங்கி இங்கு வந்தோம்.~~ ஷோரனூருக்கும் எறணாகுளத்திற்கும் இடையில் திருமூழிக்களமும் திருக்காட்கரையுமாகிய இரண்டு திருப்பதிகளுள்ளன. அங்கமாலியென்கிற ஸ்டேஷனிலிறங்கி வண்டிமார்க்கமாக ஏழுமெயில் தூரம் சென்று திருமூழிக்களமடையவேண்டும். இத்தலம் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. நம்மாழ்வார் பதிகம்பாடியுள்ளார். திருமங்கையாழ்வார் *முனியே திருமூழிக்களத்து விளக்கே * என்று பெரிய திருமொழியிலும், *பின்னானார் வணங்குஞ்சோதி திருமூழிக்களத்தானாய் முதலானாயே* என்று திருநெடுந்தாண்டகத்திலும், *மூழிக்களத்து வளத்தினை* என்று பெரியதிருமடலிலும் துணுக்கைகள் பாடியுள்ளார். ~~முன்பு இத்தலத்திற்கு அடியேன் வந்திருந்தபோது இந்த ஸன்னிதி ஸாமான்யமாக இருந்தது. இப்போது திருப்பணிப் பரிஷ்காரங்கள் விசேஷமாக நடைபெற்றிருக்கின்றன. இத்தகைய பரிஷ்காரம் இத்தலத்தில் மாத்திரமன்று; பெரும்பாலும் எல்லாத் திருப்பதிகளிலுமே காண்கிறது.~~ இத்தலத்தெம்பெருமானுடைய திருக்கைகளில் திருவாழி திருச்சங்கு

நன் பின்னமடைந்து தனியே யெடுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. [முன்னமும் இப்படியே கண்டோம்;] ஸன்னிதி பக்கத்தில் பெரியநதி பெருகுகின்றது. அதன் கரையிலேயே வஸதி ஸௌகரியமும் ஆனந்தமாகவுண்டு.

(ஆதிசங்கராசாரியருடைய ஜன்ம பூமியான காலடி யென்கிறவிடம் அங்கமாலி ஸ்டேஷனுக்கு 4 மெயில் தூரத்திலுள்ளது.) திருமூழிக்களத்திலிருந்து மறுபடியும் அங்கமாலி ஸ்டேஷன்வந்து சேரவேண்டியதே.

## 4. திருக்காட்கரை.

இது நம்மாழ்வாரால் பாடப்பெற்ற திவ்யதேசம். *உருகுமால் நெஞ்சம் உயிரின்பரமன்றிப் பெருகுமால் வேட்கையும் என் செய்கேன் தொண்டனேன், தெருவெல்லாங் காவிகமழ் திருக்காட்கரை மருவிய மாயன்றன் மாயம் நினைதொறே* என்கிற முதற்பாட்டும், *வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம்பாரித்து, தானென்னை முற்றப்பருகினான், காரொக்குங் காட்கரையப்பன் கடியனே* என்கிற பத்தாம் பாட்டும் கல்நெஞ்சையுமுருக்கும்.

ஸன்னிதியருகில் தடஞ்சுனையுள்ளது. அதன் கரையில் வஸதி ஸௌகரியமுள்ளது. [அங்கமாலி ஸ்டேஷனுக்கு மூன்றுவதான] இடப்பள்ளி ஸ்டேஷனிலிருந்து 3, 4 மெயில் சென்று சேரவேண்டிய தலமிது. திருக்காட்கரையப்பனை ஸேவித்துவிட்டு மறுபடியும் இடப்பள்ளி ஸ்டேஷனுக்கே வந்து சேர்வது.

இங்கிருந்து எர்ணாகுளத்தோடு ரைல் பாதை முடிகிறபடியால் மூன்றுவது ஸ்டேஷனாகிய எர்ணாகுளம் (south) சென்று சேர்ந்து அங்கு அரைமெயில் தூரத்தில் ஸமூஹமடம் என்கிற பரமபாவனமும் மிக விசாலமுமான இடத்தில் சென்று தங்கினோம்.

## கொச்சி மஹாராஜ ஸமாகமம்.

எர்ணாகுளத்திற்கு ஆறுவது மெயிலில் திருப்புணித்துறையில் H. H. ஸ்ரீ ஸ்ரீராமவர்மா என்னும் கொச்சி மஹாராஜா விஜயம் செய்கிறார். இவர் சாஸ்த்ரங்களறிந்த மஹா பண்டிதர். தர்க்க சாஸ்த்ரத்திலும் அலங்கார சாஸ்த்ரத்திலும் விசேஷித்து மிக வல்லவர். அபரிமிதமான வித்யாபக்ஷபாத முடையவர். மஹாபாக்ய வசாத் இவருடைய ஸமாகமம் நமக்குக் கிடைத்தது. இரண்டு மணிகாலம் வேதாந்த சர்ச்சையும் நடைபெற்றது. இவருடைய வித்யாபரிச்ரமம் மிகவும் போற்றத்தக்கது. காவ்ய நாடகாலங்காரங்கள் பலவற்றுக்கு வியாக்யானங்கள் வெகு லலிதமாக எழுதியுள்ளார். அவை பெரும்பாலும் அச்சிடப்பட்டு மிருக்கின்றன. தற்காலம் ருக்மிணீ பரிணயத்திற்கு இவருடைய வியாக்கியானம் அச்சாகி வருவதால் அதில் சில பாகங்களை அவருடனே அநுபவிக்க நேர்ந்தது. ஸம்ஸ்க்ருத ரசாஸ்வாஜி லலிதோத்துங்கமானது. யாத்திரையின் த்வரையினால் விச்லேஷிக்க நேர்ந்தது. விசேஷபாரிதோஷிகங்கள் பெற்றோம்.

எர்ணாகுளத்திலிருந்து புறப்பட்டுத் திருக்கட்டித்தானம் முதலான திருப்பதிகளை ஸேவித்த வரலாறு இனிவரையப்படுகிறது. எர்ணாகுளத்திலிருந்து செங்கணஞ்சேரி சேரவேண்டும். ஆலப்புழை வழியாய் ஒரு மார்க்கமும், ஆலப்புழை செல்லாமலே அவ்விடம் சேருகிற மற்றொரு மார்க்கமுமுண்டு. சில அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி நாம்



ஆலப்புழை வழியாகச் செல்ல நேர்ந்தது. எர்ணாகுளத்திலிருந்து இவ்விடத்திற்கு பஸ் மார்க்கமுமிருந்தாலும் ஸ்டீம்போட் மார்க்கமே மிகச் சிறந்தது. (நபர் 1-க்கு) 0—10—0 செலவில் ஆறுமணி காலத்தில் ஆனந்தமாகத் தண்ணீர் வழியே செல்வதுதான் நன்று. இவ்வழியே நாம் செல்லுகையில் இடையில் வைக்கம் என்கிற சிவ க்ஷேத்திரம் தென்பட்டது. இங்கு போட் ஒருமணிகாலம் நிற்பதாலும், போட்ஜெட்டிக்கு அதிஸமீபத்திலேயே அக்ரஹாரமிருப்பதாலும் இறங்கிச்சென்று பார்த்து வந்தோம். இவ்வூரில் வேதம் வல்ல பரம வைதிக ப்ராஹ்மணர்கள் பலர் வாழ்வதாக நாம் வெகுகாலமாகக் கேட்டிருந்தபடியால் ஒரு நாழிகைப்பொழுது இவ்வூரை யநுபவித்துக் களித்தோம். பிறகு ஆலப்புழை சென்று சேர்ந்தோம். இவ்விடத்தில் ஸ்ரீமத் வானமாமலை சின்னகலியன் ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தமும் விசேஷ கடாக்ஷமும் பெற்றவரான R. சடகோப ரெட்டியாரென்னும் பாகவத சிகாமணி நமக்குச்செய்த உபசாரங்கள் வாசாமகோசரம். மேல் திருப்பதிகளுக்கெல்லாம் உடன் வந்திருந்து ஸகல ஸௌகரியங்களும் செவ்வனே அமைத்துக் கொடுத்த பெருநன்றிகள் பாராட்டத் தக்கவை. இப்பெரியார் அவ்வூரில் தமிழன்பர் சங்க மொன்று நிறுவி, தமிழுக்கு மேட்டு மடையான இவ்விடத்திலும் தமிழ்வளர்ச்சிக்குப் பாடுபட்டுவரும் பண்பு மிக மெச்சத்தக்கது. இவ்வூரிலிருந்து ஜலமார்க்கமாகவே இரண்டு மூன்று மணி காலத்தில் செங்கணஞ்சேரிவந்து சேர்ந்தோம். இங்கிருந்து ஸ்ரீமான் T. ராஜகோபாலையங்காருடைய உதவி மிகவும் போற்றத்தக்கது. அவர் தற்காலம் எர்ணாகுளத்தில் உத்யோகஸ்தர்.

**5.** திருக்கடித்தானம். **6.** திருவல்லவாழ். **7.** திருவண்வண்டூர். **8.** திருப்புலியூர். **9.** திருவாறன் விளை. **10.** திருச்சிற்றாறு. இந்த ஆறு திருப்பதிகளில் திருவல்லவாழொன்று மாத்திரம் நம்மாழ்வாருடையவும் திருமங்கையாழ்வாருடையவும் மங்களாசாஸனம் பெற்றது. (இருவரும் பதிகம் பாடினவர்கள்.) மற்ற ஐந்து திருப்பதிகளும் நம்மாழ்வாரொருவருடைய மங்களாசாஸனம் பெற்றவை. இந்த ஆறு திருப்பதிகளையும் மோட்டார் ஸௌகரியங்கொண்டு ஒரே நாளில் ஸேவித்து முடித்தோம். காலால் நடந்து சென்று ஸேவித்தாலும் ஒரே நாளில் எளிதாக ஸேவிக்கலாம். இவ்வழிகளில் பஸ் ஓட்டமும் விசேஷமாக உண்டு.

திருவாறன் விளையொன்று மாத்திரம் திருச்செங்குன்றூரி லிருந்து ஏழுமெயில் தூரம் சென்று ஸேவிக்க வேண்டும். மற்ற ஐந்து தலங்களும் செங்கணஞ்சேரியி லிருந்து ஏழெட்டு மெயில்களுக்குட்பட்டவை. மூன்று மெயில் தூரத்திலுள்ளது திருக்கடித்தானம்.

**5.** திருக்கடித்தானம்:—*திருக்கடித்தானமுமென்னுடைச் சிந்தையும் ஒருக்கடுத்துள்ளே யுறையும் பிரான் கண்டீர்* என்பது முதலான பாசுரங்களினால் நம்மாழ்வாருடைய அபிநிவேசம் இத்தலத்தில் மிகமிக விளங்கும். ஸன்னிதியின் ஸந்நிவேசம் வெகு ரமணீயமாகவுள்ளது. கோவில் வாசலில் மிகப் பெரிய தடாகமுண்டு. மேளதாளங்களுடன் திருவாராதனம் சிறப்பாக நடக்கிறது. மிகப் புனிதமான ஸந்நிவேசம்.

**6.** திருவல்லவாழ். திருக்கடித்தானத்திலிருந்து ஆறு மெயில் தூரத்திலுள்ளது இத்தலம். இது பெரியவூர். திருவல்லாய் என வழங்கப்பட்டுவருகின்றது. நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார்கள். ஸன்னிதி மிகப் பெரிது. கோவில் வாசலில் பெரிய புஷ்கரிணியும் தருமசாலையுமுண்டு, ஸன்னிதிக்குள் பெண்டுகள் போகக்கூடாதென்கிற நிபந்தனை இத்தலத்தில் மாத்திரமுள்ளது, புருஷர்கள் ஸேவிக்குமிடத்திற்கு இருபத்தைந்து முப்பது அடிகளுக்கு இப்பால் நின்றே பெண்டுகள் ஸேவிக்கவேணும். செல்வம் மிகுந்த ஸன்னிதி இது. இவ்வூரில் மோடார்கார் ஸௌகரியம் மிகவுண்டு.

**7. திருவண்வண்டூர்.** இதுவும் நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. *தேறு நீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூர்* என்னப்பட்ட பம்பையாறு இத்தலத்திற்கு அருகில் இல்லை; (அது திருவாறன் விளைக்கு மிக அருகிலுள்ளது.) திருவல்லவாழியிருந்து 5 மெயில் தூரத்திலுள்ள தலம் திருவண்வண்டூர். இங்கு *மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனூர்க்கு* என்று நம்மாழ்வாராலும், * வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு* என்று மணவாளமாமுனிகளாலும் போற்றப்பட்ட சக்ரவர்த்திதிருமகனுருடைய ஸேவை மிக ஆனந்தம்.

**8. திருப்புலியூர்.** குட்டநாட்டுத் திருப்புலியூர் என்பது இதுவே. * கருமாணிக்க மலைமேல் என்கிற திருவாய்மொழியினால் நம்மாழ்வார் இத்தலத்தில் காட்டியுள்ள அன்பும் ஆர்வமும் வாசாமகோசரம். ஆனால் ஸந்நிதியின் ஸந்நிவேசம் ஸாதாரணமாகவுள்ளது. இங்கு ப்ரம்மோத்ஸவம் நடந்துகொண்டிருக்கையில் சென்று ஸேவிக்கப்ராப்தமாயிற்று. உயிரோடுள்ள யானையின்மீது அர்ச்சகர் பெருமாளுடன் வீற்றிருந்து கோவிலை வலம் வருவதுதான் ப்ரம்மோத்ஸவம். திருவண்வண்டூரிலிருந்து ஆறுமெயில் தூரமுள்ளது இத்தலம். சிறிய திருமடலில் * பேராலிதண்கால் நறையூர் திருப்புலியூர் * என்றது சோழ நாட்டிலுள்ள சிறுபுலியூரைச் சொன்னதாகக் கொள்ளாமல் இத்திருப்புலியூரைச் சொன்னதாகக் கொள்ளும் பக்ஷத்தில் இத்தலத்திற்குத் திருமங்கையாழ்வாருடைய பாடலுமுண்டென்று தேறும்.

**9. திருவாறன்விளை.** இத்தலமும் நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றது. மிகப்பெரிய ஸந்நிதி இது. ஸ்வர்ணமயமான த்வஜஸ்தம்பமும் மிகப்பெரிது. இவ்விடத்திலும் ப்ரம்மோத்ஸவம் நடந்துகொண்டிருந்தது. ஸேவார்த்திகளான பக்தர்களின் திரள் அபரிமிதமாகக் காணப்பட்டது. இங்கும் (உயிருள்ள) யானையின்மீது நித்யபலிபேரஸ்வாமியை எழுந்தருளச்செய்து திருவீதிவலம் வருவதுதான் ப்ரம்மோத்ஸவம். (ஆரம்முளை என்று இத்தலம் வழங்கப்படுகிறது.) இத்திருப்பதி மிகவும் ரமணீயமாய் ஆகர்ஷகமாயிருக்கின்றது. ஸந்நிதியின் பின்னே பம்பையாறு நிர்மலமாகப் பெருகுகின்றது. இத்திவ்ய தேசத்திற்கான திருவாய்மொழி * இன்பம் பயக்கவென்பது. இப்பதிகத்தின் ப்ரமேயம் இங்குச்சிறிது அநுபவிக்கப்படுகின்றது. திருவாய்மொழி ஏழாம்பத்தில் பத்தாம் பதிகம் இது. இதற்குக்கீழ்ப்பதிகமான * என்றைக்குமென்னை * என்னும் திருவாய்மொழியில்—எம்பெருமான் தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட பேருதவிக்குக் கைம்மாறு ஒன்றுங்காணாமே தடுமாறினாழ்வார். அத்தடுமாற்றத்தையாற்றுவதற்காக எம்பெருமான் "ஆழ்வீர்! நீர் ஏன் தடுமாறுகின்றீர்? நீரும் நமக்கு ஒன்று செய்து நெஞ்சாறல் தீர்ந்தவாம்படி பண்ண நாம் கருதியிருக்கின்றோம்; பண்டு திருவயோத்தியிலே நாம் குசலவர்கள் வாயாலே ஸ்ரீராமாயணம் செவிசாத்தினோமன்றோ; அப்படியே திருவாறன்விளையிலே திருவாய்மொழிகேட்பதாகப் பாரித்திருக்கின்றோம். ஆனால் ஸ்ரீராமாயணம் கேட்டபோது நாம் பிராட்டியைப் பிரிந்திருந்தோமாதலால் தனியேயிருந்து கேட்டோமென்று ஒரு குறையுண்டு; இப்போது அப்படியன்றிக்கே, நாமும் நம் பெண்டுகளுமாயிருந்து திருவாய்மொழி கேட்கப்போகிறோம். நீர் அங்கே வந்து திருவாய்மொழி கேட்பித்து ஒருவாறு நெஞ்சாறல் தீரப்பெறலாமே யென்று பணிக்க, அதுகேட்ட ஆழ்வார் 'என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட உபகாரத்தோடு நில்லாமல் அதை என் வாயாலே கேட்கவும் பாரிக்கின்றானே! இது என்ன சீலம்!' என்று உவகை தலைமண்டை கொண்டு திருவாறன் விளைக்குச்சென்று திருவாய்மொழி கேட்பித்தலாகிற கைங்கர்யத்தைச் செய்யப் பாரிக்கிறார் இப்பதிகத்தில்—என்பது. இத்திருப்பணியை இங்கு நாமும் செய்தோம்.



**10. திருச்சிற்றாறு.** இதுவும் நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற தலம். "திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு" என்று பாடப் பட்டிருந்தாலும் திருச்சிற்றாறு என்பதே திவ்யதேசத்தின் திருநாமம். செங்கன்னூர் என்று வழங்கப்படுகிற ஊர் பெரிதாகக் காண்கிறது. அங்கே பெரிய சிவாலயமுள்ளது. ஒருபுறத்தில் இத்திருப்பதியுள்ளது. மலைநாட்டுத்திருப்பதிகளுள் இத்தலமும் திருப்புலியூருமே ஏழைமையான நிலையில் காணப்படுவன. இவையிரண்டுக்கும் நம்மாழ்வாருடைய பாசுரங்கள் மிகப்பெரியனவாதலால் அந்தப் பெருமையைக்கொண்டு சித்தஸமாதான மடைந்தோம்.

திருவல்லாய் என்கிற திருவல்லவாழியிருந்தும் செங்கணாஞ்சேரியிலிருந்தும் ஸர்விஸ் கார்கள் இந்த ப்ராந்தத்தில் ஓடிக்கொண்டேயிருப்பதால் திருக்கடினத்தானம் முதலான இவ்வாறு திருப்பதிகளையும் சிரமமில்லாதபடி ஸேவிக்கலாம். கடைசியாகச் செங்கன்னூர் [திருச்செங்குன்றூர்] வந்து சேர்ந்து அங்கே திருச்சிற்றாற்றுத் திருப்பதிக்கு இரண்டொரு பர்லாங்கு தூரத்திலுள்ள தருமசாலையில் இனிதாகத் தங்கினோம். இங்கிருந்து திருவனந்தபுரம் சேரவேண்டும். அதற்குக் கொட்டாரக்கரா என்கிற ஸ்டேஷன்சேர்ந்து அங்கிருந்து ரைல்மார்க்கமாகச் செல்வது. செங்கன்னூரிலிருந்து கொட்டாரக்கரா 30 மெயில் தூரமுள்ளது. பஸ் போக்குவரத்து விசேஷமாகவுண்டு.

ஜநார்தந க்ஷேத்ரம். இது ஆழ்வார் பாடல் பெறாததாயினும் சிறந்த புராண ஸ்தலம். ச்ராத்தங்களில் "ஸ தேவ: ஸ்ரீ ஜநார்தந: ப்ரீயதாம்" என்பது இத்தலத்து ஸ்வாமியையே யென்பர். ஸந்நிதி மேட்டுநிலத்தில் மிக அழகாக வுள்ளது. வல்கல க்ஷேத்ரமெனப்படுகிறது. வற்கலா என்றே ஸ்டேஷன். கொட்டாரக்கராவிலிருந்து இரண்டு மணி காலத்தில் இத்தலமடையலாம். இத்தலம் கடற்கரையிலுள்ளது. ஸந்நிதி வாசலில் மிகப் பெரிய தடாகமும் தடாகதீரத்தில் மிகப் பெரிய தருமசாலையுமுள்ளது. அதிரமணீய வாஸ யோக்ய ஸ்தலமிது வென்று தோன்றிற்று.

## 11. திருவனந்தபுரம்.

ஜநார்த்தனத்திலிருந்து இரண்டு மணி காலத்தில் அடையக் கூடியதலமிது. நம்மாழ்வாருடைய பாடல் பெற்றது இதுவும். இத்தலத்தைப்பற்றி நாம் அதிகம் எழுதவேணுமோ? கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான நம் நாட்டுத் திருப்பதிகளோடொக்க விளங்கு மித்தலத்தின் பெருமை உலகமறிந்ததே. ஸ்வர்ணமயமான உத்ஸவமூர்த்திக்குத் திருமஞ்சனம் தினந்தோறும் ஸுப்ரபாத காலத்திலேயே மிக அற்புதமாக நடந்து வருகிறது. அந்த ஸமயத்தில் உபநிஷத்து புருஷ ஸூக்தம் ஓதவும், *வெண்ணெயளைந்த குணுங்குபதிகம் ஸேவிக்கவும், பிறகு அருளிச்செயல் கோஷ்டி நடத்திச் சாத்துமுறை செய்யவும் நமக்கு வேண்டிய ஸௌகரியமளித்த எக்ஸிக்யூடிவ் ஆபீஸர். ப்ரஹ்மஸ்ரீ ஸ்ரீ க்ருஷ்ணய்யரவர்களின் உதவிகள் வாசாமகோசரம். இவ்வூரில் நம் நாட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆதாவாகத் திருவேங்கடமுடையான் ஸந்நிதி ஸ்ரீ அனந்தபத்மநாபனுடைய ஆலயத்திற்கு அருகிலேயே நவீனமாக அமைந்துளது. இந்த ஸந்நிதியில் குலசேகராழ்வாரும் வேதாந்த தேசிகனும் ஸேவைஸாதிக்கின்றனர். இவர்களுக்கு வருஷோத்ஸவங்களும் சிறப்பாக நடந்து வருகின்றன. இந்த ஸந்நிதிக்கருகே தீக்ஷித வீதியில் மிக விசாலமான வேதபாடசாலையில் ஸௌகரியமாகத் தங்கியிருந்தோம்.

## 12. திருவாட்டாறு.

நம்மாழ்வாருடைய மிக விலக்ஷணமான ஈடுபாட்டுக்கு ஆஸ்பதமான திவ்ய தேச மிது. ஸன்னிதி மிகப் பெரிது. வெகு அற்புதமான ஸன்னிவேசம். திருவனந்தசயனத் திற்போலவே இங்கும் த்வாரத்ரயத்தாலே முகநாபிபாதங்களின் ஸேவை. அனந்த பத்ம நாபனுடைய இடையழகுக்குத் தோற்றதன்று இதுவும். ஸன்னிதியைச் சுற்றிப் பரம பவித்திரமான நதி [வாட்டாறு] பெருகுமழகு மிக நன்று ஸன்னிதியின் அமைப்பு மிகவும் அதிசயிக்கத்தக்கது. ஊரும் பெரிதே திருவட்டாறு என்பர்கள். ஸன்னிதியருகிலேயே வஸதி ஸௌகரியமுளது திருவனந்தபுரத்திலிருந்து பஸ்மார்க்கமாய் இரண்டு மூன்று மணி காலத்தில் அடையக்கூடிய தலம் இது. இத்தலத்தை விட்டுக்கிளம்ப மனமேயில்லை.

## 13. திருவண்பரிசாரம்.

(திருப்பதிசார மென்பர்கள்.) இது நம்மாழ்வாருடைய திருத்தாயாரான உடைய நங்கையாரின் அவதாரஸ்தலம். அந்த மாதரசியின் திருமாளிகையையும் இங்குக் காட்டுகிறார் கள். அது இப்போது ஒரு பஜனைமடமாக விளங்குகின்றது. இத்திருப்பதி மலைநாட்டுத் திருப்பதிகளில் கணக்கிடப் பெற்றாலும் பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகவே எண்ணத்தக்கதாயுள்ளது. வாசலில் மிகப் பெரிய தடாகமும் ஊரின் வளமும் ஸன்னிதி யின் அமைப்பும் நெஞ்சைக் கவர்கின்றன. இங்கு ஸேனைமுதலியார் மூலமூர்த்தியாகவும் நம்மாழ்வார் உத்ஸவமூர்த்தியாகவும் ஆராதிக்கப்படுகிறார்கள். *வருவார் செல்வார் வண் பரிசாரத்திருந்த என் திருவாழ்மார்பற்கு* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி இத்தலத் தெம்பெருமானை இங்குள்ளார் திருவாழ்மார்பனென்றே வழங்கிவருகின்றார்கள். இப்பெருமாளுக்கு உத்ஸவம் நடக்கிறபோது ஐந்தாறு வேளைகளில் நம்மாழ்வாரும் உடன் எழுந்தருள்வதுண்டாம். இங்குள்ள பிறமதத்தவர்களும் நம்மாழ்வாரிடத்தில் மிக்க பக்தி பூண்டிருக்கிறார்கள். நம்மாழ்வார் லைப்ரெரி, நம்மாழ்வார் வாசகசாலை என்று நிறுவி யுள்ளார்கள். திருவாட்டாற்றிலிருந்து இரண்டு மணி காலத்தில் பஸ் மார்க்கமாய் அடையக் கூடிய தலமிது. நாகர் கோவில் ஸமீபம்.

இங்கிருந்து பஸ் மார்க்கமாகவே இரண்டு மூன்று மணி காலத்தில் திருக்குறுங்குடி சேர்வது. இவ்வளவோடு மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை முடிவு பெறுகின்றது. இப் பதின்மூன்று திருப்பதிகளில் திருவனந்தபுரம் மிக மிக மிகப் பெரிது. திருவாட்டாறு, திருவாறன் விளை, திருவல்லவாழ் இவை மிக மிகப் பெரியன. திருப்புலியூரும் திருச்சிற்று ஆறும் தவிர மற்ற திருப்பதிகள் மிகப் பெரியன. 16 நாட்களில் இத்திருப்பதிகள் யாவும் ஸேவிக்கப்பட்டன. வருஷந்தோறும் இப்படி வந்து ஸேவிக்கவேணு மென்கிற ஆவலே அதிகமாகத் தோன்றியுள்ளது. இத்திருப்பதிகளுள் திருவாட்டாறு ஒரு க்ஷணமும் மறக்க முடியாததாய் நெஞ்சினுள்ளே திகழ்கின்றது.

திருவண்பரிசாரத்திலிருந்து திருக்குறுங்குடியும் வானமாமலையும் ஆழ்வார் திருநகரி நவதிருப்பதிகளும் ஸேவித்துக் கொண்டு, நம்பெருமாள் ஸன்னிதியில் மாசித்திருநாளும் [ஆறுவது திருநாள்] ஸேவித்து 15—2—51-ல் ஸ்வஸ்தானம் சேர்ந்தோம். இத்தச் சிறு யாத்திரையில் கோயமுத்தூர் ஸ்ரீமத் வேதவ்யாஸ பட்டர் திருமலாசார்ய ஸ்வாமியினுடைய வும் மங்கலம் ராமாநுஜாசார்யருடையவும் ஸஹயோக ஸஹாநுபவங்கள் பரமானந்த ஸந்தோஹகந்தமாயிருந்தன. இவ்விருவராலுமே யாத்திரை அநாயாஸமாக நடைபெற்றது.

## இந்த யாத்திரையில் நடந்த உபந்யாஸங்கள் 27

1. கோயமுத்தூரில் ஸ்ரீ பட்டர் ஸ்வாமி திருமாளிகையில் "ஸ்ரீரங்கநாச்சியார் பெருமை."
2. கொச்சி மஹாராஜ ஸம்ஸ்தானத்தில் (ஸம்ஸ்க்ருதத்தில்) "வேதாந்ததத்வம்."
3. திருவனந்தபுரத்தில் திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் "தயாசதகமும் தேசிகனும்."
4. திருக்குறுங்குடி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஜீயர் ஸ்வாமி திவ்யாஸ்தானத்தில் ஸ்வாமி நியமனத் தினால் "திருக்குறுங்குடியில் ஆழ்வார்களின் ஈடுபாடு."
5. வானமாமலையில் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஜீயர் ஸ்வாமி திவ்யாஸ்தானத்தில் ஸ்வாமி நியமனத் தினால் *தோழுத்தையோந்தனிமையும் பாசுர விவரணம்.
6. ஆழ்வார் திருநகரியில் "நம்மாழ்வாரும் எம்பெருமானாரும்."
7. பெருங்குள மென்கிற திருக்குளந்தையில் "மாயக்கூத்தனுடைய மாயக்கூத்து."
8. தென் திருப்பேரையில் *ஊழிதோறூழியுருவும் பேரும் பாசுர விவரணம்.
9. திருவரங்கம் பெரிய கோயிலில் "அழகிய மணவாளன் குணநுபவம்."

| மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை<br>முற்றிற்று. |
| --- |

## அநுபந்தம்

மலைநாட்டுத் திருப்பதிகளில் ஸேவிக்கவேண்டிய திவ்யப்பிரபந்தப் பாசுரங்களைப் பற்றின விவரணம்;

1. திருவித்துவக்கோடு. குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழியில் ஐந்தாவது பதிகம்—*தருதுயரந்தடாயேல்.*

2. திருநாவாய். திருவாய்மொழியில் (9—8.) * அறுக்கும் வினையாயின * பதிகம். பெரியதிருமொழியில் (6—8—3) * தூவாயபுள்ளூர்ந்து * பாசுரம்.

3. திருமூழிக்களம். திருவாய்மொழியில் (9—7.) எங்கானலகங்கழிவாய் * பதிகம்; பெரியதிருமொழியில் (7—1—6) * பனியேய் பரங்குன்றின் * பாசுரம். திருநெடுந்தாண்ட கத்தில் (10) * பொன்னானாய் * பாசுரம்.

4. திருக்காட்கரை. திருவாய்மொழியில் (9—6.) * உருகுமால்நெஞ்சம் * பதிகம்.

5. திருக்கடித்தானம். திருவாய்மொழியில் (8—6.) * எல்லியுங்காலையும் * பதிகம்,

6. திருவல்லவாழ். திருவாய்மொழியில் (5—9.) *மானேய்நோக்குநல்லீர் * பதிகம்; பெரியதிருமொழியில் (9—7.) * தந்தைதாய்மக்களே * பதிகம்.

7. திருவண்வண்டூர். திருவாய்மொழியில் (6—1.) *வைகல்பூங்கழிவாய் * பதிகம்.

8. திருப்புலியூர்: திருவாய்மொழியில் (8—9) * கருமாணிக்கமலை மேல் * பதிகம்.

9. திருவாறன்விளை. திருவாய்மொழியில் (7—10.) * இன்பம்பயக்க * பதிகம்.

10. திருச்சிற்றாறு. திருவாய்மொழியில் (8—4.) * வார்கடாவருவி * பதிகம்.

11. திருவனந்தபுரம். திருவாய்மொழியில் (10—2.) *கெடுமிடராயவெல்லாம் பதிகம்.

12. திருவாட்டாறு. திருவாய்மொழியில் (10—6.) * அருள்பெறுவார் * பதிகம்.

13. திருவண்பரிசாரம். திருவாய்மொழியில் (8—3.) * அங்குமிங்கும் * என்கிற பதி கத்தில் * வருவார் செல்வாரென்னும் ஏழாம்பாட்டு. [இப்பதிகம் பூர்த்தியாகவே இத்திருப் பதிவிஷயமென்று ஆசார்யஹ்ருதயத்தினல் விளங்குகின்றது.]

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்,

விக்ருதிஹு மாசிமீ திருக்கச்சிநம்பிகள் திருநக்ஷத்திரத்தன்று எழுதப்பட்டது.

---

## பகவத் விஷயம்—ஈடு முப்பத்தாறுயிரப்படி.

திருவாய்மொழிக்கு வியாக்கியானமாகப் பலபடிகள் அவதரித்திருந்தாலும் நம்பிள்ளை யின் ஈடு முப்பத்தாறுயிரப்படியே பெரும்பாலும் காலக்ஷேப க்ரந்தமாகக் கொள்ளப்பட் டிருப்பதாலும், இந்த வியாக்யானம் மாத்திரம் தனிப்பட இதுவரை அச்சிடப்பட்டிராமையா லும் இதனை நாம் நமது ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் மூலமாக வெளியிடத் தொடங்கி இது வரையில் ஏழுபத்துக்கள் அச்சிட்டு முடித்தோம். 1, 2, 6, 7, 8, 9, 10 ஆகிய ஏழு பத்துக் களின் ஈடு வியாக்யானம் அச்சாகி முடிந்துவிட்டது. மற்ற 3, 4, 5 பத்துக்கள் இரண்டு மூன்று மாதங்களில் அச்சாகி முடிவுபெறும்.

சென்றமீ பத்தாம்பத்து வெளியிடப்பட்டது. சென்ற ஐப்பசி மாதத்தில் ஒன்பதாம் பத்து வெளியிடப்பட்டிருக்கின்றது. ஏழாம்பத்தும் எட்டாம்பத்தும் க்ரமேண வெளிவந்து விடும். முதற்பத்து, இரண்டாம்பத்து, ஆறும்பத்து ஆகிய இம்மூன்று பத்துக்களும் கீழ் வருஷங்களில் வெளிவந்தவையாதலால் அவை வேண்டுமவர்கள் தனிப்பட விலை செலுத்தியே பெறவேண்டும்.

ஏழாம்பத்தும் எட்டாம்பத்தும் இப்பத்திரிகைமூலமாக வெளிவருவதற்குச் சிறிது தாமதமாகுமாதலால் முன்னடியே அவற்றைப் பெறவிரும்புமவர்கள் தனியே விலைகொடுத் துப் பெறலாம். ஆறும்பத்து முதல் பத்தாம்பத்து வரையில் 5 பத்துக்களும் ஒரு ஸம்புடமாக பயிண்டு செய்தும் கொடுக்கப்படும். அதற்கு பயிண்டு சார்ஜ் உட்பட விலை 12 ரூ.

ஈடு முப்பத்தாறுயிரப்படியில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட ஸம்ஸ்கிருத ச்லோகங் களுக்குப் பொருள் விளக்கங்கொண்ட ப்ரமாணத்திரட்டும், ஈட்டு ஸ்ரீஸூக்திகளுக்கு அரும் பத விளக்கமும் அடுத்தபடியாக அச்சிட்டு வெளியிடப்படும்.

இங்ஙனம்:

P. B. அண்ணங்கராசாரியர்,

காஞ்சீபுரம்.

## கடிதங்கள்.

பத்திராதிபரின் குறிப்பு:—நான் சென்ற மார்கழிமாதத்தில் சென்னையில் வஸித் திருந்தபோது 7—1—51 தேதி மாலையில் விலக்ஷணரான ஒரு ஸ்வாமி இந்த வியாஸத்தை எழுதிக்கொண்டுவந்து அடியேனிடம் கொடுத்து இதை ஸ்ரீராமாநுஜனில் பிரசுரிக்கவேணும் என்றார். அப்போது அடியேன் உபந்யாஸத்திற்குப் புறப்படும் ஸமயமாக இருந்ததனால் அவரோடு அதிகமாக உரையாட அவகாசப்படவில்லை; அப்படியேயாகட்டுமென்று சொல்லி வியாஸத்தை வாங்கி உள்ளே வைத்துவிட்டு அவரையுமனுப்பி விட்டு உபந்யாஸத்திற்குச் சென்றுவிட்டேன், மறுபடியும் இதைப்பற்றின ஞாபகமே எனக்கு உண்டாகவில்லை. இந்த வியாஸம் என் கைப்பெட்டியிலேயே கிடந்தது. 25—1—51 தேதியில் மலைநாட்டுத் திருப்பதியாத்திரையாகப் புறப்பட்டு வருகையில் திருக்காட்கரை ஸேவித்தவன்று இரவில், இந்த வியாஸத்தை மதராஸில் என்னிடம் கொணர்ந்து கொடுத்தவரே கனவில்வந்து தோன்றி 'நான் கொடுத்த வியாஸத்தை உபேக்ஷித்துவிடக் கூடாது, அவச்யம் பிரசுரிக்க வேணும்' என்று சொல்லிச் சென்றார். அப்போது அந்த வியாஸம் வைத்திருந்த கைப் பெட்டியும் கூடவே யிருந்தபடியால் வியாஸத்தை யெடுத்து வாசித்தேன்; அதில் என்னைப் பற்றிச் சிலவரிகள் அதிகமாக எழுதப்பட்டிருந்தாலும், பரமபதம் எழுந்தருளின மஹானின் மஹிமை அதிசயிக்கக்கூடியதா யிருந்ததால் இந்த வியாஸம் அவசியம் வெளியிடத்தக்கதே யென்று நிச்சயித்து வெளியிடப்படுகிறது. பரமபதஞ்சென்ற அந்த மஹான் மணவாள மாமுனிகளின் மஹோத்ஸவத்தையும் நம்பிள்ளையுத்ஸவத்தையும் இடைவிடாது இருபத்தொரு நாள் ஆனந்தமாக அநுபவித்து, ஒரு நோயுமின்றி உடனே காஞ்சிபுரியிலேயே திருநாட்டுக் கெழுந்தருளின அதிசயம் உலகம் பாராட்டத்தக்கதே.]

## ஆசார்ய ப்ரபாவம்

உபயவிபூதியும் ஆசார்யனிட்ட வழக்கு—என்ற வழக்குச்சொல் வார்த்தை மாத்திர மேயோ? அனுபவத்திலும் அப்படியுண்டோ? என்று ஸஹஜமாய் அநேகருக்கு இக்காலத் திலும் ஐயம் ஏற்படக்கூடும். நம் பூர்வாசாரியர்கள் காலத்தில் இது அனுபவஸித்தமாயிருந் தது என்பதற்கு அநேக சரிதங்கள் உள. ஆனால் அதெல்லாம் அந்தக்காலம். கலி தலைவிரித் தாடும் இக்காலத்தில் அப்படியிராது என்பதுதான் அநேகருக்குத்தோன்றும். ஆகையினாலே இங்கே பூருவர்காலத்தில் நடந்தவிருத்தாந்தம் ஒன்றையும் தற்காலத்தில் சமீபத்தில் நடந்த ஓர் நிகழ்ச்சியையும் சுருக்கமாக விவரிக்கிறோம். இதிலிருந்து, அன்றைக்கும் இன்றைக்கும் என்றைக்கும் உபயவிபூதியும் ஆசாரியனிட்டவழக்காய்த்தானிருந்து வருகிறது என்பது கையிலங்கு நெல்லிக்கனிபோல் விளங்கும்.

நம்பிள்ளை விபவாவதாரத்தில் கோயிலிலே எழுந்தருளியிருந்தகாலம்—அவருடைய திருமாளிகையில் அவருக்கும் அவர் ஸ்ரீபாத முதலிகளுக்கும் போதுமான இடவசதி இல்லா மல் நெருக்குப்பட்டிருந்தது. அவர் திருமாளிகைக்கு அடுத்தாற்போல் ஓர் ஸ்ரீவைஷ்ணவ அம்மையாருக்குஇரண்டு குடில் இருந்தன. அந்த அம்மையும் நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே ஆச்ர யித்தவர். ஒருநாள் நம்பிள்ளையின் சிஷ்யர்களில் சிலர் அந்த அம்மையாரிடம் "ஸ்வாமி திருமாளிகையிலே இடம் நெருக்கடியாக இருக்கிறபடியால் உம்முடைய ஒரு குடிலைக் கொடுத்தால் ஸ்வாமி திருமாளிகையுடன் சேர்த்து அமைத்து முதலிகளும் ஸ்வாமியும் இருக்க

வசதியாயிருக்கும்" என்று கேட்டார்கள். அதற்கு அந்த அம்மையார் "அடியேனுக்கு
ஸ்வாமி ஸ்ரீ வைகுண்டத்திலே ஓர் இடம் அளிக்கும் பக்ஷத்தில் அடியேன் இரண்டு குடில்
களையும் ஸ்வாமிக்கு ஸமர்ப்பிக்க ஆக்ஷேபமில்லை" என்றார்.

நம்பிள்ளை திருவடிகளில் அச்செய்தியை விஜ்ஞாபிக்க, அதற்கு நம்பிள்ளை "அதற்
குடையவன் ஸ்ரீ வைகுண்டநாதன்; நான் அவனுக்கு விண்ணப்பம் செய்து கொடுக்கிறேன்"
என்றார். இந்த வாசாபதிலில் அந்தப் பெண்பிள்ளைக்கு திருப்தி ஏற்படவில்லை. அடியே
னுக்கு அப்படியே கொடுப்பதாக ஒரு சிறுமுறி எழுதித்தரவேணுமென்றாள். நம்பிள்ளை
யும், அப்படியே ஓர் ஓலையில் இன்ன வருஷம் மாசம் இன்னதேதி இந்த அம்மாளுக்கு
ஸ்ரீ வைகுண்டத்தில் இடம் கொடுத்தேன்." என்று எழுதிக் கையொப்பமுமிட்டுத்தந்தார்.
என்னே ஆச்சரியம். சீட்டில்கண்ட நாளிலேயே அந்த அம்மாளுக்கு தேஹவியோகமுண்
டாய் பரமபதப்ராப்தி கிடைத்தது.

மேலே சொன்னது ஓர் கதை. இது எந்த காலத்திலோ நடந்ததாக குருபரம்பரை
யில் எழுதிவைத்திருக்கிற விஷயமேயொழிய இதை நேரில் பார்த்தவர்கள் இக்காலத்திலில்லை.
ஆனால் சமீபத்தில் சென்ற கார்த்திகை மாதம் ஸ்ரீ காஞ்சீ ப்ரதேசத்திலே நடந்த ஒரு வ்ருத்
தாந்தத்தைப் பார்த்தால், நம்பிள்ளைபோன்ற மஹான்களுக்கு உபய விபூதியும் அவர்களிட்ட
வழக்காயிருந்தது என்பதில் ஓர் ஆச்சர்யமில்லை. நம்பிள்ளைக்கு வெகு அற்புதமாக ஓர்
ஸந்நிதி நிர்மாணம் செய்து, அதில் அர்ச்சையில் அவரை எழுந்தருளப்பண்ணி, அதிகபக்தி
யுடன் தன் உடல்பொருள் ஆவியாவற்றையும் ஷை ஸந்நிதிக்காகவே அர்ப்பணம் செய்து
வரும் ஸ்ரீமான் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிபோன்ற ஆசார்யர்க
ளுக்கு இக்காலத்திலும் உபயவிபூதியும் தாமிட்ட வழக்காயிருக்கிறது என்பது நன்றாய்
விளங்குகிறது. இதுவும் ஓர் ஆச்சர்ய விசேஷமே; ஆசார்யகடாக்ஷமே; நம்பிள்ளையின்
அநுக்ரஹபலமே.

சென்ற ஐப்பசி மாதம் பெருமாள்கோயிலில் மணவாளமாமுனிகளின் உத்ஸவ
வைபவத்தை ஸேவிக்க அநேக ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகள் வெளியூர்களிலிருந்து வந்திருந்
தார்கள். அப்படி வந்தவர்களில் ஆசூரி ஸ்ரீ கிருஷ்ண ஸூரி என்னும் ஸ்ரீ வைஷ்ணவோத்த
மரும் ஒருவர். இவர் செங்கற்பட்டிற்கருகாமையிலுள்ள குமாரவாடி என்னும் கிராமத்தி
லிருந்தவர். வயது 68-க்கு மேலிருக்கலாம். மணவாளமாமுனிகளுத்ஸவத்தைக் கண்
களாரக்கண்டு சேவித்தார். ஒவ்வொரு தினமும் தேவப்பெருமாளையும் ஸேவிப்பது இவர்
வழக்கம். அப்படி ஸேவிக்கும் போதெல்லாம் தேவப்பெருமாளை தனக்கு ஸ்ரீ காஞ்சீ
ப்ரதேசத்திலேயே தேஹவியோகம் உண்டாகவேணுமாயும், ஸ்ரீ வைகுண்ட ப்ராப்தி
கிடைக்கவேணுமாயும் ப்ரார்த்தித்தும் வந்தார். ஆனால் தேவப்பெருமாள் உடனே அவர்
ப்ரார்த்தனைக்குச் செவி சாய்க்கவில்லை. உடனே நம்பிள்ளை உத்ஸவமும் வந்தது. ஷை
க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி நம்பிள்ளை உத்ஸவ வைபவத்தையும் அங்கு விசேஷ கோஷ்டியை
யும் ஸேவித்து ஆநந்த பரவசரானார். அவர் மனது உடனே இப்படி நம்பிள்ளை ஸந்நிதி
காரியங்களை ஒருவித குறைவுமில்லாமல் இவ்வளவு விமர்சையாய் நடத்திவரும் ப்ரதிவாதி
பயங்கர ஸ்வாமியின் திருவடியை நாடிற்று. அண்ணா ஸ்வாமியின் திருமாளிகைக்குச்
சென்று அவரைத் திருவடி வணங்கி, அடியேனுக்கு ஸ்வாமி திருவடி பலத்காலே இந்த
லோகத்திலே ஓர் குறைவுமில்லை; அடியேனுக்கு காஞ்சீ ப்ரதேசத்திலேயே தேஹ வியோகம்
உண்டாகி பரம பத ப்ராப்திகிட்டும்படிக்கு ஸ்வாமி அநுக்ரஹிக்கவேணும் என்று
ப்ரார்த்தித்தார்.



பாகவதோத்தமரும், நம்பிள்ளை பூர்ண கடாக்ஷம் பெற்றவருமான ஸ்ரீமான்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி என்ன பதில் சொன்னார் என்று நினைக்கிறீர்கள். அப்படியே
நடக்கட்டும் என்று அநுக்ரஹித்தாரா? இல்லை, உமக்குக் கிடையாது என்று சொன்னாரா?
அவர் சொன்னதாவது "ஸ்வாமின், தேவரீர் அடியேனை விட வயோதிகர்; தேவரீருடைய
மனோபீஷ்டத்தை தேவப்பெருமாள் நிறைவேற்றுவார்" என்றார். இங்கே தான் இந்த
ஆச்சர்ய ஸம்பவத்தை அநுபவிக்கவேணும். அங்கே நம்பிள்ளை அந்த அம்மைக்கு ஸ்ரீவை
குண்டநாதன் ஓர் இடம் கொடுக்கக்கடவன்" என்றாப்போலே இங்கேயும் ஷை நம்பிள்ளை
யின் பூர்ண கடாக்ஷம் பெற்ற மஹானும் "தேவப்பெருமாள் உம் அபீஷ்டத்தை நிறைவேற்றி
வைப்பார்" என்று சொன்னார். அங்கே சொன்னவர் நம்பிள்ளை; இங்கே சொன்னவர் அவ
ருடைய அந்தரங்க பக்தர். அங்கே பணிந்தவள் ஒரு பெண்பிள்ளை; இங்கே ஆச்ரயித்தவர்
சாஸ்த்ர வாஸனையோ, பக்தி ப்ரபத்தி நிஷ்டையோ எதுவுமில்லாத ஒரு ஸாது ப்ராம்மணோத்
தமர். தவிர, இன்னொரு விஷயமும் இங்கே கவனிக்கத்தக்கது. பகவானுக்கும் பாகவதாளுக்
கும் ஆச்சரியமான பரிமாற்றமுறை. தேவப்பெருமாள் இந்த ஸ்வாமியை தன் பக்தனிடம்
ஆச்ரயிக்க க்ருஷி செய்தார். பாகவதரும் எம்பெருமானுடைய அநுக்ரஹத்தைப் பெறும்படி
அந்த ஸ்வாமிக்கு ஆசீர்வதித்தார்.

உடனே என்ன நடந்தது. இந்த ஸம்பவம் நடந்த மறு நாளில் ஷை ஆசூரி
கிருஷ்ணமாசாரியர்க்கு முக்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சிநகரிலேயே தேஹ
வியோகம் ஸம்பவித்து மோக்ஷப்ராப்தி யுண்டாயிற்று.

இப்படி தத்வார்த்தங்கள் நிரம்பிய அநேக ஆச்சர்ய சம்பவங்கள் இக்காலத்திலும்
நடந்துவருகின்றன. உபய விபூதியையும் ஆளக்கூடிய மஹான்களும் ஆசார்யர்களும்
இருந்துதான் வருகிறார்கள். ஆனால் உண்மைகளை நாம் ஆராய்ந்து தெரிந்து கொள்வதில்லை.
குளத்தை ஒருவன் தாஹ சாந்தி செய்துகொள்ள வெட்டிவைக்க, அதில் ஒருவன் போய்
விழுந்து மாண்டால் அது குளம் வெட்டினவன் குற்றமல்லவே. அப்படி ஆசார்யர்களும்,
மஹான்களும் இருக்கும் இக்காலத்திலும் நாம் அவர்களின் பெருமையை அறியாமல் வீணே
அழிந்து போனால் அது நம் குற்றமே ஒழிய வேறில்லையே.

இதிலிருந்து, உபய விபூதியையும் ஆளக்கூடிய மஹான்களும் ஆசார்யர்களும்
இக்காலத்திலும் இருந்து வருகிறார்கள் என்பதும், ஞானமோ பகவத் பக்தியோ ப்ர
பத்தியோ தான் மோக்ஷத்திற்கு ஹேது என்று சொல்வதற்கில்லை என்பதும், தங்களை ஆச்ர
யிக்கும் அதிகாரியின் ச்ரேயஸ்ஸுக்காக பகவானும் பாகவதோத்தமர்களும் பரிமாறும் ஆச்
சர்யமுறை இப்படி இருக்கும் என்பதும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் தெரியவில்லையா.

K. ராமாநுஜாசாரியர், மதராஸ்.

# திருப்பாவையின் மஹிமை.

டில்லி தமிழ்ச்சங்கத்தின் ஆதரவில் ஸ்ரீ. C. S. பார்த்தஸாரதி அய்யங்கார் தலைமை
யில், ஸ்ரீ. S. R. S. ராகவன் அவர்கள் 'திருப்பாவையின் மஹிமை' என்ற விஷயத்தைப்
பற்றி சமீபத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அவ்வமயம் அவர் பேசினதின் ஸாராம்
சம் வருமாறு.

"திருப்பாவையின் ஏற்றம் பலதிறப்பட்டது. பாஷையின் நடையழகு, சொற்றொடரின் மாதுர்யம், மனதைக் கொள்ளைகொள்ளும் வர்ணனை, பகவானின் சில ஸௌலப்யாதி குணங்கள் முதலியன நிறைந்து தெவிட்டாத இன்பத்தை ஊட்டுகிறது.

"ஸ்ரீ ஆண்டாள் ஒரு மாபெரும் கவியரசி. மிக நுட்பமான உணர்ச்சிகளையும், பிரகிருதியின் வர்ணனைகளையும், பாசுரம் என்ற ஓவியத்தில் தீட்டியிருக்கிறாள். காலை வர்ணனை திருப்பாவையில் ஒரு முக்கிய அம்சமாய் விளங்குகிறது. அதை 'கீழ்வானம் வெள்ளென்றெருமை சிறுவீடு,' 'கீசுகீசென்றெங்குமானைச்சாத்தன்', 'கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி', என்ற பல பாசுரங்களில் அனுபவிக்கிறோம். ரோம் தேசத்தில் புராதன பிரஸித்த கவி ஹோமர் தன் காவியங்களில் கையாண்ட 'பூர்ண உவமை' என்ற அலங்காரத்தை 'மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்' என்ற பாட்டில் அதி ஸுலபமாய் கையாண்டிருக்கிறாள். திருப்பாவையில் பெண்களை நோன்புக்கு விடியற்காலையில் எழுப்பும் சிறப்பே தனியாக அமைந்திருக்கிறது. அதில் கேளிக்கூத்து, சிரிப்பு, குறும்பு போன்ற சில்லரை ரஸங்களும் நிரம்பி நிற்கின்றன.

திருப்பாவையில் குறிப்பிட்டிருக்கும் நோன்பை அனுஷ்டித்தால், ஸ்ரீ ஆண்டாளின் வார்த்தையில், 'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி' பெய்யும், நாட்டில் 'நீங்காத செல்வம் நிறைந்து' இருக்கும். பகவானை வாயாரப்பாடி மனத்தினால் சிந்தித்தால் நமது பாபங்கள் தொலையும். திருப்பாவையில் 'நாம சங்கீர்த்தனம்' ஒருமுக்கிய வழிபாடு முறையாகக் காண்கிறோம்.

"பிராட்டியின் புருஷாகாரத்தை முன்னிட்டே எம்பெருமானை அணுக வேண்டும்" என்ற விசிஷ்டாத்வைதக்கொள்கை பல பாசுரங்களால் உணர்த்தப்பட்டிருக்கிறது. நப்பின்னையின் புருஷகாரம் கிட்டிவிட்டால், கிருஷ்ணனின் கிருபைக்குப் பாத்திரமாவது என்ன கஷ்டம்!

"ஸ்ரீ ஆண்டாளானவள், திரிவிக்ரம, நரசிம்ம, ராம, கிருஷ்ணாவதாரங்களை திருப்பாவை என்ற பாமாலையில் அனுபவித்து வழிபடுகிறாள். விசேஷமாக கிருஷ்ணாவதாரத்திலேயே ஸ்ரீ ஆண்டாளுக்கு ஈடுபாடு அதிகமிருப்பதைக் காண்கிறோம். 'ஆயர் குலத்தினில் தோன்றிய அணிவிளக்கு' என்று பலபடியாக எம்பெருமானின் நீர்மையைக்கண்டே உருகுகின்றாள்.

"நாராயணனே பரதத்வம்" என்ற உண்மையை ஸ்ரீ கோதை முதற்பாட்டிலேயே குறிப்பிட்டு, கடைசி பாட்டுகளில்—

'எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும், உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்று......'

என்று கிருஷ்ணனிடம் பிரார்த்திக்கின்றாள். இதுவே ஸ்ரீ வைஷ்ணவர்களாகிய அஸ்மதாதிகளின் நித்ய நிரந்தர பிரார்த்தனையாகுக."

ஸ்ரீ. ராகவன் பேச்சுக்குப் பிறகு ஸ்ரீ. பார்த்தசாரதி அய்யங்கார் அமுதமான வார்த்தைகள் கூறினார். வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது கலைந்தது.

A. ராமானுஜன், B. A., புதுடில்லி.

